Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்-299

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

*Mahamahimopadhyaya*
Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM 3.




வருஷச் சந்தா ரூ. 10. ஆஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

20 7 73ல் வெளியிடப்பட்டது

(ஸ்ரீவசனபூஷணம்—ஆங்கில மொழி பெயர்ப்பு)

## மதிப்புரை (பத்ராதிபர்)

ஸர்வஜ்ஞஸார்வபௌமரென்று குலாவப்படும் பிள்ளைலோகாசாரியர் அஷ்டாதச ரஹஸ்யங்களென்று ப்ரஸித்தமாய் வழங்கப்படும் பதினெட்டு ரஹஸ்ய நூல்களை யருளிச் செய்தார். இவற்றுள் ஸ்ரீவசனபூஷண மென்பது நிகரற்றது. மணவாளமாமுனிகள் இந்நூலின் பெருமையைத் தமது உபதேச ரத்தினமாலையில் ஏழு பாசுரங்களால் கொண்டாடி, மேல் ஏழு பாசுரங்களில் இதன் ஸாரமான பொருள்களையும் விவரித்தருளியிருப்பதோடு, இதற்கு விஸ்தாரமானதொரு உரையும் இட்டருளியிருக்கிறார். இது பாஷ்யசைலியில் எழுதப்பட்டிருப்பதால் இதை ஸ்ரீவசனபூஷணபாஷ்யமென்றே வடதேசத்தில் வழங்குகிறார்கள்.

உபநிஷத்துக்களில் வ்யக்தமாக விளங்காத பொருள்களை அறிவிப்பதற்கும் பரஸ்பர விரோதம் தோன்றுமிடங்களில் அவற்றின் பரிஹாரத்தைப் பெறுவிப்பதற்கும் சாரீரகமீமாம்ஸை என்னும் ப்ரஹ்மஸூத்ரம் அவதரித்திருப்பது வைதிக கோஷ்டிகளில் ப்ரஸித்தம். இதேபோல் ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் சில விடங்களில் பொருள் விளக்கம் பெறுவிக்கவும், சில விடங்களில் விரோத பரிஹார முறைகளை விளக்கவுமே வடக்குத்திருவீதிப்பிள்ளையின் இரு திருக்குமாரர்களான பிள்ளைலோகாசார்யரும் அழகியமணவாளப்பெருமாள்நாயனாரும் ஸ்ரீவசனபூஷணத்தையும் ஆசார்ய ஹ்ருதயத்தையும் அருளிச்செய்தனர். இவ்விரண்டினுள் ஸ்ரீவசனபூஷணம் மிகச் சிறந்ததாகக் குலாவப்படுகிறது. "ஸாங்காகில த்ரமிட ஸம்ஸ்க்ருதரூபவேத ஸாரார்த்தஸங்க்ரஹ மஹாரஸ வாக்யஜாதம், ஸர்வஜ்ஞலோககுரு நிர்மிதம் ஆர்யபோக்யம் வந்தே ஸதா வசனபூஷண திவ்யசாஸ்த்ரம்." என்கிற தனியனொன்றே இதன் பெருமையை விளக்கப் போதும்.

இதைப் பல் பாஷைகளில் மொழிபெயர்த்தும் விளக்கியும் பலர் எழுதியிருக்கிறார்கள். க்வாலியர் மாநகரத்தில் வாழும் ஸ்ரீமான். ஸத்யமூர்த்தி ஐயங்கார் என்பவரை நமது ஸ்ரீராமாநுஜன் அபிமானிகள் பலரும் அறிவார்கள். இவருடைய பல ஆங்கில வ்யாஸங்கள் நமது பத்ரிகையில் வெளிவந்திருக்கின்றன. அபூர்வ ராமாயணம், முமுக்ஷுப்படி, தத்வத்ரயம் முதலியன இவருடைய ஆங்கில மொழி பெயர்ப்பாக வெளிவந்திருக்கின்றன. அதேபோல இந்த ஸ்ரீவசனபூஷண மொழி பெயர்ப்பையும் வெளியிட எண்ணியிருந்தோம். ஆனால் அதற்குள் வடநாட்டைச் சேர்ந்த ஹரிமாலயயோகி அகண்ட தபோநிதி ராமதாஸ் ஸ்வாமிஜீ மஹாராஜ் என்கிற ஓர் யோகீச்வரர் இதைக்கண்டு மகிழ்ந்து தாமே தம் செலவில் இதை அச்சிடுவித்து வெளியிட்டிருக்கிறார். இப்புத்தகத்தில் யதிராஜவிம்சதிக்கு ஆங்கில மொழி பெயர்ப்பும், உரையும் ஆசிரியரின் சில ஆங்கிலச் சொற்பொழிவுகளும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. தம் நெஞ்சில் தோன்றியதெல்லாவற்றையும் சேர்த்து அவை தான் முன்னோர்களின் கருத்தென்று வெளியிடும் இக்காலத்து வித்வான்கள் போலன்றிக்கே ஸ்ரீஸத்யமூர்த்தி ஸ்வாமி முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து பேசுபவர் என்பதே இவரிடத்தில் நாம் கண்ட மஹாகுணம். இவருடைய சைலியின் அழகை ரஸிகர்கள் ஏற்கனவே அறிந்திருக்கிறபடியால் நாம் அதைப்

(இதன் தொடர்ச்சி அட்டையின் 3ம் பக்கத்தில்

# ஸ்ரீ ராமாநுஜன் 299



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 25 | ப்ரமாதீசஹு 1973 ஜூலை மாதம் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 11 |
|---|---|---|

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது ஸ்ரீ ராமாநுஜனுக்கு அடுத்த விஜயதசமியன்று இருபத்தாருவது பிராயம் தொடக்கமாகின்றது. இப்பத்திரிகை இருபத்தைந்தாவது ஸம்புடத்தின் பதினேராவது மலராகும். அடுத்த மலரோடு இருபத்தைந்து வருஷ பூர்த்தியாகிறது. இதை யுத்தேசித்து வெள்ளிவிழாக் கொண்டாட்டமென்று நடத்துவதொரு முறையுண்டு. இதுபற்றி நாம் உத்தேசித்திருக்கிறபடியை இங்குத் தெரிவிக்கிறோம். முந்நூறு மாதங்கள் பூர்த்தி யடைவதனால் முந்நூறு உபந்யாஸங்கள் கொண்ட ஒரு மலர் வெளியிட உத்தேசித்திருக்கிறோம். ஏற்கனவே அத்புதோபந்யாஸமாலை, மதுரோபந்யாஸமாலை 62, 63, 64, 72, 73 உபந்யாஸமாலைகள், உபந்யாஸ சதத்வயம் முதலான பல உபந்யாஸத் தொகுதிகளை வெளியிட்டிருக்கிறோம். அவ்வுபந்யாஸங்கள் பெரும்பாலும் பெரியனவாயிருக்கின்றன. இப்போது நாம் உத்தேசிக்கிற உபந்யாஸமாலைகள் அங்ஙனம் பெரியனவாக அல்லாமல் ஒரு பக்கத்தில் இரண்டு உபந்யாஸங்களுக்குக் குறையாமல் வெளிவருமாறு அமைக்கலாகும். அத் தொகுதியை அன்பர்கள் ஆவலுடன் எதிர் பார்த்திருக்க வேண்டியது.

முக்கியமான குறிப்பு: அடுத்த வருஷத்தின் சந்தாவையும் நிகழும் வருஷத்தின் சந்தா பாக்கியையும் விரைவில் அனுப்பித் தரவேணும்.

இங்ஙனம்,

பத்ராதிப ப்ரதிநிதி.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீபெரும்பூதூரில் அரிய பெரிய விசேஷம்

## பகவத் ராமாநுஜ மஹாக்ரது அகிலபாரத ஸ்ரீவைஷ்ணவ மஹாஸம்மேளனம்.

நாற்றிசையும் எண்டிசையும் புகழோங்கி விளங்கும் ஸ்ரீபத்ரபஹம்ஸேத்யாதி. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளை அடியேன் ஸத்யகாமரென்றும் ஸத்யஸங்கல்பரென்றும் நெடுநாளாக நம்பி வருகின்றேன். "இமவந்தம் தொடங்கி இருங்கடலளவும்" என்ற பெரியாழ்வார் அருளிச்செயலின் படியும் "ஆசைலாத் அத்ரி கந்யாசரணகிஸலயந்யாஸதந்யோப கண்டாத், ஆரக்ஷாநீநஸீதாமுக கமலஸமுல்லாஸ ஹேதோச்ச ஸேதோ:" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியின் படியும், வரையறுக்கப்படுகிற மாநிலத்தில், ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி இருபது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக அநுஷ்டித்து வரும் அரிய பெரிய காரிய விசேஷங்களை உலகமெல்லாம் ஸாக்ஷாத்கரித்து வருவதால் இங்கு நாம் விசேஷித்துத் தெரிவிக்க வேண்டிய ப்ரபாவம் ஏதுமில்லை. ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியின் அருப்பெரும் செயல்களில் ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் பல லக்ஷக்கணக்கான ரூபாய்களின் செலவில் அமைத்திருக்கும் ராமாநுஜகூடம் குறிப்பிடத்தக்கதாகும். இதுபோன்ற மற்றும் பல விசேஷங்களை விளக்கப்புகுந்தால் மஹாபாரதத்திலும் மேலாகும்.

சென்ற பரீதாவி ஸம்வத்ஸரத்தில் திருமலையில் திருவேங்கடமுடையான் பரிஸரத்தில் நடத்தியருளின ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஸஹஸ்ரகுண்ட மஹாச்ரதுவும் சென்ற ஏப்ரல் மாஸத்தில் தில்லி மாநகரில் நிகழ்த்தியருளின அகிலபாரத வேதவித்வத்ஸம்மேளனமும் ஸ்ரீ ஸ்வாமியின் ஸத்யஸங்கல்பத்வத்தை நிலைநாட்டுவனவாகும். இவை எல்லாம் ஏகதேசமென்னும்படியாக நாளது ஆகஸ்டு மாஸத்தில் பகவத் ராமாநுஜ திருவவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் நடத்தியருள ஸங்கல்பித்திருக்குமது ஏற்கனவே பல பாஷைப் பத்திரிகைகளிலும் உலகமெல்லாம் கண்டிருக்கிறது. இங்கு நாம் தற்போது சிறிதே விளக்கம் தருகிறோம். மறுபடியும் 15 நாட்களுக்குள் இன்னும் சிறிது விளக்கம் தருவோம்.

## ஆரம்பமும் அவஸாநமும்

14—8—73 (மாலை) செவ்வாய்க்கிழமையன்று அங்குராரோபணம் நடைபெறும். மறுநாள் 15—8—73 காலை முதலாக 19—8—73 ஞாயிற்றுக்கிழமை இரவு அளவாக மேலே குறித்த மஹாக்ரதுவும் ஸ்ரீவைஷ்ணவ மஹாஸம்மேளனமும் மிகமிக அதிசயிக்கத்தக்க முறையில் நடைபெற்று வரும்.

ஸந்நிதிக்கு எதிரிலுள்ள திருவவதார மஹாமண்டபத்திற்கு நாடோறும் சிறு காலையில் ஸ்வாமி எழுந்தருளி நான்கு வேதங்களுக்கும் நான்கு குண்டங்கள் அமைத்து திருவஷ்டாக்ஷராதி மந்த்ரங்களைக் கொண்டு பகவத்ராமாநுஜ மஹாக்ரது ஹோமம் நடத்தப்படும். வைகாநஸ ஆகமப்படி நடைபெறும்.

5 நாளும் திவ்யப்ரபந்த கோஷ்டியும் ருக் யஜுஸ் ஸாம வேதபாராயண கோஷ்டியும் இதிஹாஸ புராணாதிபடநமும், விசேஷித்து பகவத் ராமாநுஜ க்ரந்த மாலா, ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா முதலான பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்தி பாராயணங்களும் நடைபெறும்.

ஸ்ரீ பெரும்பூதூர் ஸந்நிதி வீதி முழுவதும் ஸாலங்கார பந்தல்மயமாக விளங்கும். தினந்தோறும் பகல் 2 மணி முதல் 6 வரையில் வித்வான்களின் உபய வேதாந்தோபன்யாஸங்கள் நடந்துவருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஐந்து நாட்களுக்கும் ஐந்து திருநாமங்களை ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி திருவுள்ளம்பற்றி யிருக்கிறார். அதன் விவரணம் வருவாறு.

(1) உபநிஷதநுபவதினம். (2) ஸ்ரீ பாஷ்யாநுபவதினம். (3) பகவத் கீதாநுபவதினம். (4) பகவத்விஷயாநுபவதினம். (5) பூர்வாசார்ய ஸ்ரீஸூக்த்யனுபவதினம்.

இந்த க்ரது விசேஷத்தில் அந்வயிக்க விரும்பும் ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்கள் தங்கள் யோக்யதைகளைத் தெரிவித்து தங்கள் முழு விலாஸம் கொண்ட ப்ரார்த்தநாபத்ரிகையை ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி ஸந்நிதிக்கு அனுப்பிக்கொள்ளவேணும். ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி நிகழும் ஜூலை மாதம் முடிவுவரையில் திருமலையில் எழுந்தருளி யிருப்பதால் அவ்விடத்திய விலாஸம் வருமாறு—

ஸ்ரீமத்பரமஹம்ஸ த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள், (P. P. C.) பாதபுஷ்கரணி (காட்டேஜ்), திருமலை ஹில்ஸ், வயா திருப்பதி. A. P.

(2) ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் எழுந்தருளியிருப்பராதலால் அவ்விடத்து விலாஸம்.

ஸ்ரீ பெரும்பூதூர் P. O. (செங்கல்பட்டு ஜில்லா)

எழுந்தருளும் ஸ்வாமிகளின் ததீயாராதனைக்குரிய ஏற்பாடுகள் ஒழுங்காகச் செய்யப்பட்டிருக்கின்றன.

## மற்றொரு சிறு விளம்பரம்

# திவ்யப்ரபந்த அதிகாரிகளுக்கு ஆதரவு

நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை அதிகரித்து பரீக்ஷைகொடுக்கவல்ல வித்யார்த்திகளுக்கு மேலே குறித்த மஹாக்ரது ஸந்தர்ப்பத்தில் பரீக்ஷித்துப் பரிசளிக்கப்படும். நாலாயிரதிவ்யப்ரபந்தம் பூர்ணமாகவும் உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதி, முமுக்ஷுப்படிமூலம் இவற்றில் பரீக்ஷை.

35 வயதுக்கு உட்பட்டவர்கள் பரீக்ஷ்யராவர்கள். அவர்கள் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிக்கு விண்ணப்பம் அனுப்பிக்கொள்ள வேண்டியது.

ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயணராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளின்
நியமனப்படி வெகுநாளாக நடந்துவரும்

## "பக்தி நிவேதனா"

என்கிற தெலுங்கு மாதப்பத்திரிகையில் வெளியிட்ட அழைப்பிதழின் ஸாரம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பகவத் ராமாநுஜ மஹாக்ரது

(அதிசாந்தி என்கிற ஸ்ரீவிஷ்ணுயாகம்)

## அகில பாரத ஸ்ரீவைஷ்ணவ ஸம்மேளனம்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர்
ஸ்வாமியின் மங்களாசாஸந பூர்வமான

# அழைப்புப் பத்ரிகை

அன்பார்ந்த பக்தர்களே!

விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம்,
ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ:.

என்கிறபடியே இவ்வுலகத்தைப் படைத்து, தாங்கி, காப்பாற்றி, முடிவில் மறைந்து எல்லாருக்கும் ஸுகம் சாந்தி இவைகளை யளிப்பவன் ஸ்ரீமந்நாராயணனே யாவன். இதனால் உலகில் வாழும் எல்லோரும் இப்புடைகளில் ஸ்ரீமந் நாராயணனோடு தொடர்புடையவர்களே யென்பதை நன்கறிந்து, எல்லோருடனும் நட்பு கொண்டு அவர்களுக்கு நன்மையையே விரும்புமவர்களே உண்மையான வைஷ்ணவர்களாவர்.

இவ்விஷயத்தை உலகுக்கெல்லாம் உபதேசித்து வாழ்வித்தருளினவர் ஸ்வாமி எம்பெருமானாரே யாதலால், அவருடைய திருவவதாரத்தாலும், அர்ச்சாவதாரத் திருக்கோலத்தாலும் பரம புனிதமாக்கப்பட்ட ஸ்ரீபெரும்பூதூரில் வைகாநஸ ஆகமத்தில் கூறப்பட்ட அதிசாந்தி என்னும் ஸ்ரீ மஹாவிஷ்ணுயாகமொன்றை நிகழும் ஆடி—ஆவணி மாதங்களில் நடத்த உத்தேசித்திருக்கிறது. இச்சமயத்தில் "அகில பாரத ஸ்ரீவைஷ்ணவமஹாஸம்மேளன" மென்கிற ஸ்ரீவைஷ்ணவ பெருங் கூட்டமும், ஸ்ரீமதுபய வேதாந்தாசார்ய பீடத்தின் சார்பில் நடைபெறும். இதன் விவரம் வருமாறு:—

முதல் நாள் ஆடிமீ 31வ. (15—8—73) உபநிஷதநுபவத் திருநாள்
இரண்டாம் நாள் ஆடி 32வ. (16—8—73) ஸ்ரீபாஷ்யாநுபவத்திருநாள்
மூன்றும் நாள் ஆவணி 1வ. (17—8—73) பகவத்கீதாநுபவத் திருநாள்
நான்காவது நாள் ஆவணி 2வ. (18—8—73) பகவத் விஷயாநுபவத் திருநாள்
ஐந்தாவது நாள் ஆவணி 3வ. (19—8—73) பூர்வாசார்ய ஸ்ரீஸூக்த்யநுபவத் திருநாள்

ஆக இவ்வைந்து நாட்களிலும் அவ்வவ் விஷயங்களைக் குறித்து ப்ரபல வித்வான்கள் சொற்பொழிவாற்றுவர்கள்.

இதுவுமன்றி வேத திவ்யப்பிரபந்த ஸேவையும் ஸ்ரீபாஷ்யம் பகவத் விஷயம் முதலிய புனித நூல்களின் பாராயணமும் நடைபெறும்.

இவ்வேள்விக்கு (1) ஸ்ரீ உ. வே. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீபெரும்பூதூர் பேரருளாள யதிராஜ ஜீயர் ஸ்வாமி (யதிராஜ ஜீயர் மடாதிபதி) (2) ஸ்ரீ. உ. வே. அப்பன் சடகோபராமாநுஜ ஜீயர் ஸ்வாமி (எம்பார் ஜீயர் ஸ்வாமி) (3) பெருமாள் கோயில் மஹாமஹோபாத்யாய ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ. உ. வே. அண்ணங்கராசார்ய ஸ்வாமி என்றிவர்களைக்கொண்ட அழைப்புக்குழு அமைக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் ஆஸ்திக மஹாஜனங்கள் யாவரும் மிக்க குதூஹலத்துடன் இந்த மஹா க்ரதுவிலும் ஸம்மேளனத்திலும் கலந்துகொண்டு பகவத் பாகவதாசார்ய கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களாய் எம்பெருமானார் திருவருளுக்கு இலக்காக வேணுமென்று பிரார்த்திக்கிறோம்.

இதற்குப் பணமாகவும் பொருளாகவும் உதவி செய்ய விரும்புமவர்கள் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியிடம் சேர்ப்பிக்கவேண்டும்.

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# அரங்கேசற்கீடளித்த மஹோத்ஸவம்

# ஒன்பதாவது வைரவிழா

"இப்புவியில் அரங்கேசற் கீடளித்தான் வாழியே" என்ற வாழிதிருநாமத்தின்படி மணவாள மாமுனிகள் ஸ்ரீரங்கநாதன் நியமனமடியாக அப்பெருமானுக்கு ஈடளித்துச் சாற்றுமுறை செய்த நாள் ஆனித்திருமூலம் என்பதை அனேக திவ்ய தேசங்களில் நிகழும் ஆசாரத்தினாலும் யதீந்த்ரப்ரவணப்ரபாவாதி க்ரந்தங்களினாலும் அறிந்து வருகிறோம். அது ப்ரமாதீச வருஷத்தில் என்பதும் தெரியவருகிறது. நிகழும் ப்ரமாதீச வருஷ ஆனித்திருமூலம் ஒன்பதாவது ஷஷ்ட்யப்த பர்யாயமாக (Ninth Diamond Jubilee) தேறுகின்றது. இதையொட்டி அந்த மஹோத்ஸவத்தை ஆங்காங்குச் சிறப்பாகக் கொண்டாட வேண்டியது அவசியம் என்று பல பெரியோர்கள் திருவுள்ளம் பற்றியுள்ளனர்.

இதன் ப்ரகாரம் ஸ்ரீரங்கம், திருவல்லிக்கேணி, திருவயிந்திரபுரம், திருநீர்மலை முதலிய திவ்ய தேசங்களில் இம் மஹோத்ஸவம் நடந்தமை பத்ரிகைகளில் வெளிவந்துள்ளது. சரித்திர பூர்வமான இச்சந்தர்ப்பத்தில் சாச்வத நினைவுச்சின்னமாக ஸ்ரீ பகவத்விஷய ஸ்ரீ கோசத்தை, அதாவது திருவாய்மொழியின் முக்கிய வியாக்கியானமான ஈடுமுப்பத்தாறாயிரப்படியைப் பாசுரம், பிரமாணத்திரட்டு இவற்றுடன் வெகுநேர்த்தியான முறையில் ஒரு வருடத்திற்குள் பிரசுரம் செய்ய நிச்சயிக்கப்பட்டுள்ளது.

புனிதமான இந்தக் கைங்கரியத்தை நிறைவேற்ற கீழ்க்காணும் பெரியார்களை உறுப்பினர்களாகக்கொண்டதொரு குழு அமைக்கப்பட்டுள்ளது.

## போஷகர்கள் (Patrons)

ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
ஸ்ரீமான் உ. வே. ஜகத்குரு. காதி. P. B. க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி.

தலைவர்: ஸ்ரீ உ. வே. காஞ்சிபுரம் P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமி.

துணைத்தலைவர்கள்:

ஸ்ரீமான் உ. வே. S. க்ருஷ்ணசாமி ஐயங்கார், அட்வகேட், புத்தூர்.
(ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபர்)
ஸ்ரீமான் உ. வே. V. N. வெங்கடவரதாசாரியார், அட்வகேட், சென்னை.
ஸ்ரீமான் உ. வே. R. V. சேஷாத்ரி ஐயங்கார், அட்வகேட், சென்னை.
ஸ்ரீமான் உ. வே. எம்பார் விஜயராகவாச்சாரியார், பாகவதர், ஸ்ரீரங்கம்.
ஸ்ரீமான் உ. வே. K. R. ஸ்ரீநிவாஸய்யங்கார்.
(ட்ரஸ்டி. ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமி தேவஸ்தானம், திருவல்லிக்கேணி.)
ஸ்ரீமான் பரமார்த்த பூஷணம் நாதெள்ள சம்பத்து செட்டியார், சென்னை.

## செயலாளர்கள் (Secretaries)

ஸ்ரீமான் உ. வே. தி. அ. சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரிய ஸ்வாமி, ஸ்ரீரங்கம்.
ஸ்ரீமான் உ. வே. வேளுக்குடி K. வரதாசாரிய ஸ்வாமி, சென்னை.
ஸ்ரீமான் உ. வே. A. ராமாநுஜாசாரிய ஸ்வாமி, சென்னை.

பொக்கிஷதார்: ஸ்ரீமான் தி. அ. அனந்தாழ்வான், காஞ்சீபுரம்.

இன்னம் பல கனதனவான்களை போஷகர்களாக இருக்க ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கிறோம்.

நூறு ரூபாய் அல்லது அதற்கு மேற்பட்ட தொகையை அளிப்பவர்கள் இக் குழுவின் உறுப்பினர்களாகக் கருதப்படுவார்கள். அவர்களுக்கு இரண்டு ஸெட் ஈட்டு ஸ்ரீ கோசம் அளிப்பதாக உத்தேசித்துள்ளோம்.

இக்குழுவில் உறுப்பினர்களாகச் சேர்ந்து இக்கைங்கர்யத்தை ஸபலமாக்கும் படி ஆஸ்திகப் பெருமக்களை விசேஷித்துப் பிரார்த்திக்கிறோம்.
தொகை அனுப்பவேண்டிய விலாஸம்:

T. A ANANTHALWAN, 29, South Mada Street, KANCHIPURAM-3.

## *16—7—73வரை Donation வரவு*

| | |
|---|---|
| ஸ்ரீமான் உ. வே. P. B. அண்ணங்கராசாரியர் (President) | ரூ. 250 |
| ஸ்ரீமான் புத்தூர் S. க்ருஷ்ணசாமி ஐயங்கார், M.A.,B.L., (Vice-President) | ரூ. 101 |
| ஸ்ரீமான் திருச்சேறை வெங்கடவரதன், B.A.,B.L., (Madras) | ரூ. 101 |
| K. A. தேவராஜன், B.SC., C.A. (Bhopal) | ரூ. 101 |

# அன்பர்களே! இங்குக் கண்ணைச் செலுத்துங்கள்!

(மேல்வரும் புநர்வஸு-பர்யவேக்ஷணத்தின் மஹாப்ரவேசம்)

நாம் நெடுநாளாகப் பலகால் ஒன்று எழுதுவதுண்டு; (அதாவது) "வலு(ழி)ச்சண்டைக்குப் போகமாட்டேன், வந்த சண்டையை விடமாட்டேன்" என்று. ஸ்ரீ ராமாயணத்தில் இராமபிரானைப்பற்றி ஒரு வார்த்தை—*நாவிஜித்ய நிவர்த்ததே* என்பதாக. வெற்றி பெறுமல் மீளமாட்டான் இராமன். அவனை யொப்பவன் அண்ணு என்னுமடியேன். திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் பலவாண்டுகள் வாதாடி க்ஷாமண பத்ரிகையோடு ஒய்ந்து நின்ருர். திருச்சி ஏ. வி. கோபாலாசாரியாரும் அப்படியே. இவர்களுக்குமுன்னே (திருவுள்ளூர்) திவான்பஹத்தூர் டி. டி. ரங்காசாரியாரும் அப்படியே. அதன் ஸம்க்ஷிப்த மான விவரணம்— திருமங்கையாழ்வார் திருவரங்கம் பெரிய கோயிலில் ப்ராகார கோபுர மண்டபாதி நிர்மாண கைங்கர்யங்கள் செய்தருளினவகை குருபரம்பரா ப்ரபாவாதிகளில் காண்கிறபடியைத் தாம் அநுவதித்து, இது அநியாயமான கதை யென்றும் ஆழ்வாருக்கு அத்யந்தம் அவத்யகரமானதென்றும், பிற்காலத்தவர்கள் சேர்த்ததேயன்றி உண்மையானதன்றென்றும் வேதாந்த தீபிகையில் எழுதி வெளியிட்டிருந்தார். அப்போது நாம் பட்டருடைய ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியாகிய, "ஜிதபாஹ்ய ஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணி மண்டப வப்ரகணுந் விததே பரகாலகவி: ப்ரணமேப ஹி தாந்." என்கிற ச்லோகத்தை ஸமுத்போதனம் செய்ய, ஆஸ்திகரான அவர் மிகவும் அநுதபித்து வெளியிட்ட க்ஷாமணுதிகள் ஜகத் ப்ரஸித்தம். எமது வாழ்க்கையில் இங்ஙனே ஒன்றிரண்டல்ல; பலபலவுண்டு. ஸ்ரீமத் புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யரையும் ம. ம. ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யரையும் பற்றின செய்திகள் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். பழங்கதைகளான அவை கிடக்க—ஸமீபகாலத்தில் ஒன்றே கேளீர். ஸ்ரீராமாநுஜன் 245ல், "உத்தமூர் ஸ்வாமியின் உத்தமோபகாரம்" என்ற மகுடங்கொண்ட வியாஸம் பேர்க்கவும் பேராதபடி விளங்குகின்றது. அது வெளியிட்டு நான்கு வருஷங்களுக்கு மேலானபடியால் சிலர் மறந்திருக்கக்கூடும், சிலர்க்குத் தெரியாமலுமிருக்கலாம். ஆகையால் அந்த வியாஸத்தை இதோ வெளியிடுகிறேன் உலகம் தெளிய.

## அநுவாதம் வருமாறு

"நீசனேன் நிறையொன்றுமிலேன் நெஞ்சு கனிந்து குளிர்ந்து நளிர்ந்து நிகழ்த்துமிவ்வுரையை எண்டிசையோரும் குறிக்கொள்க. ஸ்ரீமத் உத்தமூர்ஸ்வாமியின் கைம்மாறிலாத பேருதவியை என்னென்றியம்புவேன்! ஆழ்வார் *கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று ஓர் எண்டானுமின்றியே வந்தியலுமாறு* என்று, தாம் பெற்ற பேற்றின் கனத்தை உன்னியுன்னியுகந்து தம் திருவுள்ளத்தோடே உசாவினர். அடியேன் உலகறிய வெளியிட்டுத் தரிக்கின்றேன்.

ஆழ்வார் *அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து* என்றாப் போலே, அடியேன் அறியாக்காலமே தொடங்கி உலகுக்கு நன்மையையே கருதிப் பல துறைகளில் நூல்களை இயற்றி வெளியிட்டுவருகின்றேன். அவற்றுள் பரபக்ஷ

ப்ரதிக்ஷேபக்துறை யென்பதோர் துறையுமுண்டாகி, அதில் பிறருடைய துர்வாதங்களுக்கு மறுப்பான நூல்கள் [வடமொழியிலும் தென்மொழியிலும்] வெளியிடப்பட்டு வருகின்றன வென்பதை அறியாதாரில்லை. அப்படி நாம் வெளியிட்டுவரும் நூல்கள் [மறுப்புச் சுவடிகள்] இதுகாறும் வெளிவந்தவை நாற்றுக்கு மேற்பட்டவை என்பதும் உலகமறிந்ததே. அவற்றில் பலவற்றுக்குப் பிறரிடமிருந்து மறுப்புரை தோன்றியதே கிடையாது. சிலவற்றுக்கு மட்டும் (பல வருடங்களுக்கு முன்பு) சிலரால் சிறிது மறுப்பு வெளியிடப்பட்டு அவை உடனுக்குடனே நம்முடைய மறுப்புரைகளினால் மாய்ந்தனவென்பதும் மாநில முழுதுமறிந்தது. ஆக, நமது மறுப்பு நூல்கள் அந்தனையும் இதுகாறும் வெற்றியுடன் விளங்குமவையே யன்றி, பங்கமடைந்து நிற்கும் (நூல்) காகிதம் ஒன்றுகூடக் கிடையாதென்பது திண்ணம்.

அஸஹிஷ்ணுதை என்னும் நோய்க்கு மருந்தே கிடையாததலால் அதற்கு வசப்பட்டவர்கள் சிலர் "ஏதோ எழுதிவருகிறார், ஏதோ அச்சிட்டுவருகிறார்; அவற்றைக் கணிசிப்பவர்களில்லாமையாலே தமது நூல்கள் வெற்றிபெற்றுவிட்டனவாக நினைக்கிறார்" என்று சில அறிவிலிகளிடம் பேசிக்கொள்வதுண்டு. தெய்வம் இதை ஸஹிக்குமதன்றே. அடியேனுடைய எழுத்துக்களெல்லாம் கல்வெட்டும் செப்பேடுமானவையென்று உலகம் நம்பும்படி ஸ்ரீமதுபயவே. அபிநவதேசிக. உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமியைக் கொண்டு எம்பெருமான் செய்வித்த அதிசயம் ஈண்டு விளக்கிக் காட்டப்படுகின்றது.

இக்கும்பமாநகரில் ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி சிலபலவாண்டுகட்கு முன்பு பாடசோதனம் என்றொரு புத்தகத்தை வடமொழியில் எழுதி யச்சிட்டு வெளியிட்டிருந்தார். (அதன் விஷய மென்னவென்றால்) கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம் முதலான காலக்ஷேப க்ரந்தங்களில் சிலபல தவறுகள் ஓலையேடுகளிலுங்கூட சோதிக்கப்படாமல் ஏறிவிட்டனவாகவும், அவற்றைத் தாம் பெரும்பாலும் தம்முடைய புத்திபலத்தாலே சோதிப்பதாகவும் காட்டி "அது அப்படியிருக்கவேணும், இது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்; அதை அப்படித் திருத்தலாமென்று தோன்றுகிறது, இதை இப்படித் திருத்தினாலொழியப் பொருந்தாது" என்று இங்ஙனே பலபலவகையாக வெழுதி, நெடுங்காலமாகப் பெரியோர்கள் பேணிவந்த பாடங்கள் பலவற்றை சின்னபின்னமாக்கியிருந்தார். அது அடியேனுடைய பார்வைக்கு வந்தது. "பல பெரியார்கள் பக்கலிலே இங்ஙனே பாடம் கேட்டிருக்கிறேன்" என்றோ, "தாளகோசங்களில் இங்ஙனே பாடம் காண்கிறது" என்றோ அந்த ஸ்வாமி தெரிவித்திருந்தாராகில் உபேக்ஷித்திருக்கலாம். அப்படியல்லாமல், தாம் ஊஹிப்பதாகவும், தம்முடைய ஆலோசனையில் இப்படியிப்படி தோன்றுவதாகவுமே யெழுதியிருந்தபடியால் இதை விமர்சித்தேயாகவேணுமென்று தோன்றிச் சிரமப்பட்டுப் பல ஸ்ரீகோசங்களை யாராய்ந்ததில் அந்த பாடசோதன க்ரந்தம் மறுக்கத்தக்கதே யென்று நிச்சயித்து "பாடசோதந பரீக்ஷா" என்கிற மறுப்பு நூலை விரிவாகவே யெழுதி வெளியிட்டேன்.

(1) ஸ்ரீ பாஷ்யாதிகள் தெலுங்கு, க்ரந்தம், நாகரி ஆகிய மூன்று லிபிகளில் வெகுகாலமாகவே பதிப்பேறியிருப்பதால் அவற்றில் திருத்தம் பெற்றிருக்கிற பல பாடங்களைத் தாம் திருத்துவதுபோல் காட்டுகிறார்; (2) அவசியம் திருத்தவேண்டிய இடங்களைத் திருத்தாமலே விட்டிருக்கிறார்; (3) இவர் புதிதாகத் திருத்தியிருப்பவையெல்லாம் விபரீதங்கள், ஒன்றுகூட ஏற்கத்தக்க திருத்தமன்று; ச்ருதப்ரகாசிகையை நோக்காமலே சில திருத்தங்கள் செய்திருக்கிறார்—என்று இவ்வகையில் விஷயங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக்காட்டி அவருடைய சோதனம் அப்ராமாணிகம் என்று முடித்திருந்தேன். அந்த பரீக்ஷாக்ரந்தம் வைதிக மநோஹரா மூலமாக உலகம் பரவியிருந்தது. [இது 1945-ஆம் வருஷத்தில்.]

"ஜ்ஞாதாவாயும் உத்தமாச்ரமியாயுமிருக்கிற மஹாஸ்வாமின் க்ரந்தத்தை இவன் ஏதோ அஸூயையினால் பழித்துவிட்டான்; இது ஸ்வாமிக்கு மிகவும் அவஜ்ஞாவஹமல்லவா? இதை நாம் வெறுமனே விட்டுவிடலாகாது; ஸபை கூட்டி இவனை வரவழைத்து வாய்மாளப் பண்ணியேயாகவேணும்" என்று கனத்த ரோஷத்தோடு தீவ்ரமான முயற்சிகொண்ட அந்த ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்கள் ஒரு நாளைக் குறிப்பிட்டு, தேவப்பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் வித்வத்ஸபை கூட்டுவதாக விளம்பரம் வெளியிட்டு அடியேனுக்கும் அறிவித்தார்கள். குறிப்பிட்ட ஸமயத்தில் அங்கு விடைகொண்டேன். மண்டபம் நிறையப் பல வித்வான்கள் கூடியிருந்தார்கள். இப்போது ஸ்ரீமத ஹோபிலமட ஆஸ்தானத்தை யலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமத் அழகியசிங்கர் [அப்போது க்ருஹஸ்தாச்ரமியாய்] அந்த ஸதஸ்ஸை அலங்கரித்தருளியிருந்தபடி. [இதில் அடியேன் எழுதும் விஷயங்களில் ஏதேனும் பொய்ம்மையிருப்பதாகத் தோன்றினால் அந்த மஹா ஸ்வாமி மூலமாக மெய்ம்மையுணரலாமென்றே ஸ்ரீ ஸ்வாமி திருநாமத்தை இங்கு நிர்தேசித்தபடி.] பூர்வாச்ரமஸ்த கோழியாலம் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் உபாத்யாயராயிருந்த ஸ்ரீமதுபயவே. (கீர்த்திமூர்த்தியான) இளங்காடு. ரங்காசாரியர் ஸ்வாமி ஸதஸ்ஸுக்கு அக்ராஸநாதிபதியாக வரிக்கப்பட்டிருந்தார். கோழியாலம் ஸ்வாமியின் சோதனங்களையெல்லாம் யுக்தமென்று ஸ்தாபிப்பதற்காக அவருடைய அந்தேவாஸிகளில் தலைவரான ஸ்ரீமதுபயவே. உத்தமூர். வீரராகவாசாரியர்ஸ்வாமி வெளியூரிலிருந்து ஸதஸ்ஸுக்கு வரவழைக்கப்பட்டிருந்தார். அவர் புரிந்த உத்தமோபகாரமே இங்கு விளக்கப்படுகிறது.

ஸதஸ்ஸு ஆரம்பமாவதற்கு முன்னே அடியேனுடைய பாடசோதன பரீக்ஷையில் அது தவறு, இது தவறு என்று சில வித்வான்களிடம் பேசிக்கொண்டிருந்தார் அவர். பிறகு ஸதஸ்ஸு ஆரம்பமாயிற்று. அடியேனுடைய பரீக்ஷாக்ரந்தத்தை முன்னாடியே பல வித்வான்களுக்கு ஸமர்ப்பித்திருந்தேனாதலால் அவரவர்கள் முன்னமே கடாக்ஷித்திருந்து விமர்சவைகரியில் அடியேனைச் சில கேள்விகள் கேட்கவும் அடியேன் விடை கூறவதுமாக நடந்துகொண்டிருந்தது.

பிறகு ஸமாதானம் சொல்லவேண்டிய ஸமயம் அணித்தாக, ஏழெட்டு நிமிஷங்களுக்கு முன்னமே உத்தமூர் ஸ்வாமி யெழுந்து சென்றுவிட்டார். திரும்பி வருவரென்றே ப்ரதீக்ஷித்திருந்தார்கள் வித்வான்கள். மேற்கே தேரடியருகில் சென்று கொண்டிருக்கிறாரென்று சிலர் சொல்லக் கேட்டபின் ஸதஸ்ஸு விஸர்ஜனம் செய்யப்பட்டது. அவர் எழுந்து சென்றதற்குக் காரணம் இன்னதென்று ஒருவருமறிந்திலர். தம்முடைய வாதத்திற்கு அனுகூலரான வித்வான் ஒருவருமிருந்திலரென்று சென்றதாகப் பிறகு பேசிக்கொண்டார்கள். அதைப்பற்றி இப்போது விசாரலேசமுமில்லை. அச்செய்திகளை அனைவரும் அறவே மறந்துவிடலாம். ப்ரக்ருதம் அடியேன் விஜ்ஞாபிக்கும் விஷயத்தைக் குறிக்கொண்மின்.

ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டாலும், அவருடைய பாடசோதன க்ரந்தமோ, அதற்கு மறுப்பாக அடியேனெழுதிய பரீக்ஷாக்ரந்தமோ மறையவில்லையே. உத்தமூர் ஸ்வாமி ச்ருதப்ரகாசிகையோடு ஸ்ரீ பாஷ்யத்தை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறாரென்பதை அறியப்பெற்ற நாம் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தத்தில் மிகவும் யுக்தமானதென்று காட்டப்பட்டுள்ள பாடங்களை இந்தப் பதிப்பில் இவர் ஆதரித்து வெளியிட்டிருக்கிறாரா? நம்முடைய மறுப்புகளுக்கு ஏதேனும் விடை கூறியிருக்கிறாரா? என்று பார்க்கத் தோன்றிப் பரிசிலித்துப் பார்க்கையில், ஸ்வாசார்யருடைய சோதனங்களை த்ருணீகரித்துத் தள்ளினவதோடு அடியேன் பரீக்ஷாக்ரந்தத்தில் ஸ்தாபித்த பாடங்களையே பெரும்பாலும் பதிப்பித்திருக்கும்படியைக் கண்டேன். "ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே" என்ற தேசிக திவ்ய ஸூக்திப்படி ஆசார்யரையே பரதெய்வமாகக் கொண்டிருக்குமிவர்—அவருடைய உபதேசங்களையே அருமருந்தாகக் கொண்டிருக்குமிவர் என்ன செய்யவேண்டும். ஆசார்யர் திருத்திக்கொடுத்த பாடங்களைத் தாம் ஆதரித்தமை காட்டவேண்டும்? ப்ரதான பாடமாகப் பதிப்பியாவிடினும் (புட்நோட் கொடுக்கும் முறையில்) பாடாந்தரமாகவாவது பதிப்பித்திருக்க வேண்டாமா? (கோழியாலம்) ஸ்வாமி திருத்திய பாடங்கள் தவறு என்பதை நான் ஸாமான்யமாகக் காட்டியிருக்கவில்லை; ஒவ்வொன்றிலும் விபுலமான நிரூபணங்களை அசைக்கமுடியாதபடி செய்திருக்கிறேன். ஏதேனுமொரு வகையில் அவற்றுக்கு மறுப்பு வெளியிட்டிருக்கவேண்டும். ஸர்வாத்மநா கைகூப்பிநிற்கும் நிலையே காண்கிறது. இவ்விஷயங்கள் வித்வான்கள் விமர்சிக்க வேண்டியவையாதலால் ஸம்ஸ்க்ருதத்திலேயே விரிவாக விளக்கியெழுதி ஆசார்ய ஸூக்திரக்ஷா என்னும் நூலை இத்துடன் சேர்த்து வெளியிடுகிறேன். ஆசார்யர் திருத்தின பாடங்களை இவர் கைக்கொள்ளாமல் தள்ளினது தவிர ஸ்வேச்சையாகச் சில மாறுபாடுகளையும் [சில என்று ஏன்? பல மாறுபாடுகளைச்] செய்திருக்கிறார். அவற்றிலும் சில எடுத்துக்காட்டியிருக்கிறேன். ஸ்வாசார்யர் திருத்திக்காட்டின பாடங்களை ஏன் கொள்ளவில்லை? என்று கேட்டால், "உலகுக்கெல்லாம் உபயோகப்படக்கூடிய ஸ்ரீகோசத்தில் விவாதாஸ்பதமான பாடங்களை யதேஷ்டமாகப் புகுத்தலாகாதென்கிற எண்ணத்தினுல்—என்று இவர் விடைகூற முடியாதபடிக்கன்றோ இவருடைய பதிப்பு அமைந்துள்ளது?

உலகமறிய ஒன்றே காட்டுகிறேனிங்கு. ஸ்ரீ பாஷ்யோபக்ரமத்தில் ஸமாஸ விஷயமான சங்காஸமாதான ஸ்தலத்தில் "ப்ரதிப்ரஸவ ஸம்பவாத்" என்றே உலகமெங்குமுள்ள பாடம். ஒரு தாளகோசத்திலிருந்து அடியேன் உபதேசம் பெற்ற பாடம் ஸத்பாவாத் என்பது. இப்பாடத்தை அடியேன் தவிர வேறு யாரும் ப்ரஸ்தாவித்ததில்லை; 'இது இவன் ஸ்வதந்திரமாகக் கல்பித்த பாடம்' என்று வித்வான்கள் இற்றைக்கும் விவாதப்பட்டே வருகிறார்கள். ஏறக்குறைய ஐம்பது வருஷமாக இது விவாதத்திலுள்ளது. இப்படியிருந்தும், இவர் ச்ருத ப்ரகாசிகாயுக்த ஸ்ரீபாஷ்யப் பதிப்பில் ஸம்பவாத் என்கிற பாடத்தை அறவே தள்ளி ஸத்பாவாத் என்கிற பாடத்தையே நிஸ்ஸபத்நமாகப் பதிப்பித்துவிட்டார். 'ப்ரதிவாதிபயங்கரருடைய பாடம் பேர்க்கவும் பேராதது' என்பதே இவருடைய திடநம்பிக்கை. இந்த நம்பிக்கையினால்தான் ஸ்வாசார்யர் சிக்ஷித்த பாடங்களையும் தள்ளி நான் ஸ்தாபித்த பாடங்களையே கொண்டிருக்கிறாரென்பதில் வாய்திறக்க வழி கிடையாது. ஸம்பவாத் என்ற பாடத்தைக் கோழியாலம் ஸ்வாமியும் திருத்தவில்லை.

இரண்டு விஷயங்களை முக்கியமாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். (1) கோழியாலம் ஸ்வாமியின் பாடத் திருத்தங்கள் மிகவும் அந்தியாவலையென்று நான் எழுதிப் பிரசுரஞ் செய்ததை (அக்காலத்தில்) மறுக்க முயன்றவிவர், இத்தனை காலம் பொறுத்து "முன் மறுக்க முயன்றது பிசகு; பரீக்ஷாக்ரமத்திலெழுதியுள்ளதெல்லாம் பாராட்டத்தக்கதே" யென்று தமது பதிப்பினால் கைமெட்டாக்கி வைத்ததனால்—இதேபோல் என்னுடைய எந்த நிரூபணமும் ப்ராமாணிகமே, அசைக்க முடியாததே—என்று நிலைநாட்டி வைத்தாராகிறார். (2) கோழியாலம் ஸ்வாமி புகுத்தின பாடங்களை அவருடைய அந்தேவாஸியான இவர் திரஸ்கரித்ததுபோல, இவர் இப்போது புகுத்திய பாடங்களை இவருடைய அந்தேவாஸி யென்று ஒருவர் கிளம்பித் திரஸ்கரிக்கவே போகிறார். ஆஸ்தான பரம்பரைபோல இதுவும் பரம்பரையாக வருவது அழகியதே.

இத்தோடு சேர்ந்துவரும் ஆசார்ய ஸூக்திரக்ஷா என்கிற வடமொழி நூலை அடியேன் நேற்று எம்பெருமானார் மஹோத்ஸவத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் எழுதிக்கொண்டிருக்கையில் அடியேனுடைய சிரந்தந ஸுஹ்ருந்மணியும் ஸஹ்ருதயருமான ஸ்ரீபதுபயவே (திருவெவ்வுளூர்) பழவேரி. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி யாத்ருச்சிகமாக அங்கே காட்சிதந்து இது என்ன லேகனமென்று கேட்கையில் ஒரு மணிகாலம் விஷயங்களை விரிவாக விஜ்ஞாபித்து, இதை விரைவில் அச்சிட்டு ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியசிங்கர் ஸந்நிதிக்கும் அவ்விடத்து ஆஸ்தான வித்வான்களுக்கும் அனுப்புவேன்; விஷயங்களை ஆழ்ந்து விமர்சிக்க ப்ரார்த்தித்ததாக விஜ்ஞாபிக்கவேணுமென்றேன். ஓமென்றிசைந்து சென்றார். ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதியிலும் இங்ஙனே பிரார்த்திக்கிறேன்.

மற்றும் அடியேனுக்குப் பரமாப்தர்களாய் விளங்கும் உப்பிலியப்பன் ஸந்நிதி நவநீத ஸஹோதரர்கள், வைகநல்லூர் நடாதூர் ஸ்வாமி, மதுராந்தகம் பாதூர் ஸ்வாமி, கோம ஸ்வாமி, திருப்பதி கலாசாலையில் விளங்கும் வித்வான்கள்,

திருவரங்கம் பெரிய கோயிலில் திகழும் தோதவத்தித் தூய்மறையோர், சென்னையில் வாழும் ப்ரவசன ப்ரவீணர்கள் பலரையும் இங்ஙனே ப்ரார்த்திக்கிறேன். ஆந்தராளிக ஸம்ப்ரதாய விஷயமாக இருந்தால் இப்படி அடியேன் ப்ரார்த்திக்க இடமில்லையாகும். ஒரு தலையான அபிமானத்தினால் உண்மையை வெளியிடமுடியாமல் தளரவேண்டியிருக்குமதில். இதில் கலாவைஷய்யர் பாராட்ட ப்ரஸக்தியின்மையால் தடஸ்தபாவத்தை யவலம்பித்து, தத்துவத்தை வெளியிட முடியுமென்று நம்பிப் ப்ரார்த்திக்கிறபடி. வெளியிடாவிடினும் அவரவர்களது உள்ள முணருமத்தனையே போதும்.

இத்துடன் சேர்த்து வெளியிடப்பட்டுள்ள (ஸம்ஸ்க்ருதபாஷையிலமைந்த) ஆசார்ய ஸூக்தி ரக்ஷையின் விஷயங்களை வடமொழியறியாதாரும் ஸாரமாகத் தெரிந்துகொள்ள ஒரு வினாவிடை அமைக்கப்படுகிறது.

வினாக்கள்—மத்யஸ்த வித்வான்களினுடையவை.
விடைகள்—உத்தமூர்ப் பண்டிதருடையவை.

1. வினா:—அந்தரத்வாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *ந ச த்வயோரநயோ:* என்று தொடங்கும் வாக்கியத்தில் (த்வயோ:) என்கிற பதம் இருமுறை விழுந்திருப்பது பிசகென்றும், அது ஒரு முறைதானிருக்கத் தக்கதென்றும், மற்றொரு முறையிருப்பதை அடித்துவிடவேணுமென்றும் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனத்தில் இருக்கிறதே, அதை என்ன பண்ணினீர்? அடித்துவிட்டீரா?

விடை:—அங்கு ச்ருதப்ரகாசிகையில் (த்வயோ:) என்பது இருமுறையிருப்பதை நிலைநாட்டி, ஒன்று வாக்யபரமென்றும் மற்றொன்று உபாஸநபரமென்றும் விவரித்திருப்பதாக நம் அண்ணா தமது பரீக்ஷாக்ரந்தத்தில் மறுவாய்திறக்க வழியில்லாதபடி நிருபித்திருப்பதனால் கோழியாலம் ஸ்வாமி திருத்தியது தவறென்று துணிந்து அண்ணா நிலைநாட்டியபடியே அச்சிட்டிருக்கிறேன். வேறு என்ன பண்ண முடியும்?

2. வினா:—தக்ஷிணாயநாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் 'ப்ரஹ்ம ப்ரபித்ஸத:' என்றிருப்பது வியாகரண விருத்தமென்றும், (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரபித்ஸமாநஸ்ய) என்றாவது (ப்ரபித்ஸோ:) என்றாவது திருத்தவேண்டுமென்றும் உமது ஆசிரியர் எழுதியிருந்தாரே, அங்கு என்ன செய்தீர்?

விடை:—இப்படி ஸ்வேச்சையாகத் திருத்துவது ஸாஹஸமென்றும், திருத்தவேண்டுவது அவசியமானால் (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரேப்ஸத:) என்று திருத்துவதோ (பாடாந்தரமாகக் கொள்வதோ) பொருத்தமென்றும் உபபத்தியோடு அண்ணா எழுதியிருந்தபடியால் அதுதான் மிகவும் யுக்தமென்றுகொண்டு அப்படியே அச்சிட்டேன்.

3. வி௱:—ஈக்ஷதிகர்மாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் "ஈக்ஷிது: ஸ்தாநதயா நிர்திஷ்ட" என்றவிடத்தில் (ஈக்ஷிது:) என்பது அந்வயிக்கமாட்டாதென்றும் (ஈக்ஷிதஸ்தாநதயா) என்று திருத்தியே யாகவேண்டுமென்றும் (தத்ஸ்தாநதயா) என்ருவது திருத்தியாகவேண்டுமென்றும் கோழியாலம் ஸ்வாமி எழுதியிருந்தாரே, அப்படியே திருத்தினீரா?

விடை:—இங்கு ஸ்வாமி ஏதோ மருண்டுவிட்டாரென்றும், மறுபடியும் ஸ்ரீ பாஷ்ய பங்க்திகளை ஸேவித்தால் தெளிவு பிறக்குமென்றும், (ஈக்ஷிது:) என்று தானிருக்க வேணுமென்றும் அண்ணு நன்கு விளக்கியிருப்பதனுல் உண்மையில் இங்கு ஸ்வாமி ப்ரமித்துவிட்டதாகவே தெரியவந்தபடியால் ஸ்வாமி திருத்தின பாடத்தை உபேக்ஷிக்கவே நேர்ந்துவிட்டது.

4. வி௱:—இந்த்ரப்ராணுதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் உபாத்தமான "த்வமேவ மே வரம் வ்ருணீஷ்வ யம் த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே" என்கிற ச்ருதிவாக்யத்தில் (த்வமேவ) என்பதை (தமேவ) என்று திருத்தவேணுமென்று ஸுப்ரஸித்தரான ஓர் ஆசாரியர் உபதேசித்ததாக உம்முடைய ஆசாரியர் எழுதியிருக்கிருரே, அதை அப்படியே திருத்தினீரா?

விடை:—அந்தோ! எப்படித் திருத்தமுடியும்? மேலே (யம்) என்றிருப்பதற்குச் சேர, முன்னே (தம்) என்றிருக்கவேணுமென்று ஸ்வாமி நினைத்துவிட்டார். அது பிசகென்று அண்ணு வெகுயுக்தமாக நிருபித்திருப்பதால் இதுவே சிறந்த ஆசார்யோபதேசமென்று கொண்டேன். இது ச்ருதிவாக்யமென்பதை ஸ்வாமி சிந்தியாமற்போனுர். திருத்துவது ஆத்மஸாக்ஷ்யத்திற்கு ஒவ்வாததோடு அபவாதத்திற்கும் ஹேதுவாகுமென்று விட்டிட்டேன்.

5. வி௱:—ப்ரயோஜநவத்த்வாதிகரணத்தில் 'வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாதித்யாதி ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் ஐந்தாறு பங்க்திகளுக்குப் பிறகு "தத்ரோத்தரம் ந ஸாபேக்ஷத்வாத் இதி" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை அங்கிருந்து பெயர்த்து ஸூத்ரத்திற்குமுன்னே கொண்டு தள்ளவேணுமென்று உமதாசிரியர் எழுதியிருந்தாரே. அப்படியே தள்ளினீரா?

விடை:—தள்ளினதுண்டு; ஸ்ரீ பாஷ்யஸூக்தியைத் தள்ளவில்லை; அஸ்மதாசார்யோக்தியைத்தான் தள்ளநேர்ந்தது. பரீக்ஷையில் அண்ணு எழுதிய மறுப்பு மறுக்க முடியாமலிருப்பதனுல்.

6. வி௱:- ஸம்பந்தாதிகரணத்தில் "ப்ருஹதாரண்யகே ச்ரூயதே" என்று ஸ்ரீ பாஷ்யோபக்ரமமிருப்பதில் "ச்ரூயதே" என்கிற க்ரியாபதம் அநந்விதமாகையால் அதைத் தூக்கியெறிய வேண்டியதென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிருரே, அதைத் தூக்கியெறிந்தீரா?

விடை:—ஸ்வாமி யெழுந்தருளியிருந்தால் அவரைத் தூக்கியெறியலாம்; அவருடைய உக்தியைத்தான் தூக்கியெறியவேண்டும்படி அண்ணாவின் நிரூபணமிருந்தது. என் செய்வேன்? ஆசார்யோக்தி திரஸ்காரபாபம் அபரிஹார்யமாயிற்று.

7. வினா:—ரசநாநுபபத்தியதிகரணத்தில் *விப்ரதிஷேதாச்ச* என்கிற ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "பந்தமோக்ஷஸாதநாநுஷ்டாநம் மோக்ஷஞ்ச ப்ரக்ருதேரேவ—இத்யாஹு:" என்றிருப்பதில் "இங்கு இதிபதம் இருக்கத் தகாதென்று நிச்சயமாய்ச் சொல்லுகிறேன்; த்விதீயையிருக்குமிடத்தில் அது இருக்கக்கூடாதாகையால்" என்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிறாரே; அந்த இதியை யெடுத்தெறிந்துவிட்டீரா?

விடை:—யதியிருந்தால் ஒருவாறு எடுத்தெறியலாம்: இதியின் உபபத்தியை அண்ணா வெகு ஸமஞ்ஜஸமாக நிரூபித்திருப்பதனால் தெளிவுற்றேன். "அத்ர இதிபதம் ந ஸ்யாதிவ" என்றெழுதியிருக்கலாம் ஸ்வாமி; "ந ஸ்யாதிதி நிச்சியதே" என்றெழுதினது அவஜ்ஞையாய்விட்டது. இங்கு அண்ணாவின் நிரூபணம் அதிமநோஹரம்.

8. வினா:—*விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்* என்கிற அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே *ஸந்நிதே: அகிஞ்சித்கரத்வம்* என்றிருப்பதை அகிஞ்சித்ருபத்வமென்று திருத்தவேணுமென்று நிச்சயமாகச் சொல்லுவேனென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிறாரே; இந்த நிச்சயத்தையாவது நிலைநாட்டினீரா?

விடை:—எந்த நிச்சயமும் காசுக்குதவாததாயிற்றே. அதைப் பாடாந்தரமாகப் போடவுங்கூட நெஞ்சாலும் நினைக்கமுடியாதபடியன்றோ அண்ணா வரைந்திருக்கிறார்.

9. வினா:—ஸஹகார்யந்தர வித்யதிகரணத்தில் ஸித்தாந்தத்தில் "ச்ரவணமநநாப்யாம் ப்ராப்தம் வேதநம் ப்ரதிலப்ய இத்யர்த்த:" ப்ராப்தம் என்றதை அப்ராப்தமென்று பெரியோர்களின் உபதேசத்தைக்கொண்டு அண்ணா திருத்தியிருந்தாரே; பாவ ப்ரகாசிகையில் ப்ராப்தம் என்கிற பாடம் ஆதரிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு கோழியாலம் ஸ்வாமி "ப்ராப்தமென்றிருந்தாலும் அப்ராப்தமென்றிருந்தாலும் உபய பாடத்தையும் நிர்வஹிக்கக் குறையில்லை" என்றெழுதியிருந்தாரே அங்கு என்செய்தீர்?

விடை:—என்ன செய்ய முடியும்? ஆசார்யாபிப்ராயரக்ஷணம் அப்ராப்தமென்று முடித்தேன். அண்ணாவின் நிரூபணம் அசைக்கமுடியாமலன்றோ இருக்கிறது?

10. வினா:—ஸ்வாசார்யர் காட்டின திருத்தங்களை உபேக்ஷித்ததுபோல அண்ணா காட்டின திருத்தங்களையும் உபேக்ஷித்ததுண்டோ?

விடை: அது எப்படி முடியும்? *தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம* என்று அடியேன் விஜ்ஞாபிக்கவேணுமா?

முடிவான வினா:—அப்படியானால் அண்ணாவின் பரீக்ஷாக்ரந்தத்தை மறுக்கவேணுமென்று ஸதஸ்ஸுக்குச் சென்றீரே; எங்ஙனம் சென்றீர்?

விடை:—இப்போது நெஞ்சு தளும்பியிருக்கிறது; ஆலோசித்துச் சொல்லுகிறேன். (விரிவு வடமொழி நூலில் விரைவில் மறுபதிப்பாகும்)

## இதேபோன்ற மற்றிரண்டு விஷயங்கள்

1. விவேகி வித்வத்ஸார்வபௌமரென்று நாமுகந்த விருது சூட்டப் பெற்ற திருவிண்ணகர் நவநீதம் உ. வே. ஸ்ரீராம தேசிகர் 1945-ல் பதிப்பித்த தேசிகப்ரபந்தவுரையில் சென்னை அட்வகேட் ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்கார் அவர்கள் தென்னுசார்யர்களைத் தூஷித்துத் தாமெழுதிய தேசிக சரித்திரத்தை அதில் சேர்த்து அச்சிடுவித்திருந்தார். அந்த தேசிக சரித்ரம் மிகத் தவறான தென்று நாம் விரிவான நிருபணங்கள் செய்து கண்டித்திருந்த பிறகு—

### முக்கியமாக மேலே கேளுங்கள்

அந்த ஸ்ரீராம தேசிகர் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார மூலத்தை இரண்டு பகுதியாக வெளியிட்டார். முதற் பகுதியின் முன்னுரையில் (1960ல்) "ஸ்ரீதேசிக சரித்ரம் பல் வேறு பதிப்புக்களில் வெளிவந்துள்ளது. அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதி வெளியிட்டுள்ளார். 'காணப்படுகிறது' என்று எழுதவேண்டுமேயொழிய 'காணப் படுவது உண்மையே' என்று எழுதியது எதனாலென்று கேட்டால் நவீனர்கள் எழுதிவரும் தேசிக சரித்ரங்களை நாம் கண்டித்தது ஸமஞ்ஜஸமே என்று காட்டு வதற்கேயாகும்.

2. அஹோபிலமட ஆஸ்தான வித்வானாயிருந்த ஸ்ரீ உ. வே. புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யரோடு நமக்கு நடந்த வ்யாகரண விசாரமொன்றில் (அதாவது தேசிக க்ரந்தஸ்த்த அலுக் ஸமாஸ விஷயக விசாரத்தில்) என்னுடைய வாதமே ஸமஞ்ஜஸமென்று (காலஞ்சென்ற) வேளியநல்லூர். ஸ்ரீநிவாஸதாதாசாரியரும் D.T. தாதாசார்யருமாகிய இவ்விருவரும் சேர்ந்து உத்யான பத்ரிகையில் வெளியிட் டார்கள். அதைக்கண்ட புத்தங்கோட்டமையங்கார் வ்ருக்ஷமானது தன்னைவெட்டு கிற கோடாலிக்குத்தானே துணைசெய்யுங் கதையாக ஆயிற்றே! என்று அழுது கொண்டே ஓய்ந்தார். இது நம்முடைய ரக்ஷாவிலோசன பாவ ப்ரகாசிகையில் விளக்கமாகக் காணத்தக்கது. இதைப் பிறகு பல நூல்களிலும் விரிவாக அநுவாதம் செய்திருக்கிறோம்.

# ஸஹஸ்ரப்ரவேசத்தின் அநுபந்தம்

## மதுராந்தகம் ஸ்வாமிக்கு முன்னம் தெரிவிப்பது

நீரும் நுமரும் கொண்டிருக்கும் கொள்கைகள் சென்ற நூற்றாண்டி லிருந்தேயாம். அவை தேசிகனுட்பட ஸகல பூர்வாசார்ய ஸூக்தி விருத் தங்களென்பதை நூற்றுக்கு மேற்பட்ட நூல்களினால் கல்வெட்டு செய்திருக் கிறேன். அத்தகைய அபார்த்தங்களுக்கு ஆதாரம் காட்டுவதாக பெரிய வாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசார்யர் மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி களை எடுத்துக்காட்டுவதாக அபிநயிப்பது "வெள்கிப்போ யென்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே" என்று தேவரீர் தாமே அநுஸந்திக்கைக்கு உறுப்பாம் அத்தனை. உங்களுடைய கொள்கைகளில் ஜீவநாடியை வேரறுக்கவல்ல தேசிக திவ்யஸூக்திகளிரண்டை இந்த எடுத்துக் காட்டுகிறேன்.

ஒன்று தமிழ்; மற்றொன்று ஸம்ஸ்க்ருதம். தமிழ் வாக்யச்ரேணியை ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்ப்பீராக. ஸம்ஸ்க்ருத வாக்யத்தை தமிழில் மொழிபெயர்ப்பீராக. மூலத்தையும் மொழிபெயர்ப்பையும் ஒரே காகிதத்தில் அச்சிட்டு (இதுவேதான் எங்களுடைய ஸித்தாந்தமும்'' என்றெழுதி வெளியிட்டுவிட்டால் (மேலே கேளீர்) சேட்லூர் தாண்டவ கண்டனத்தில் "காஞ்சீம் விஷ்ய ஹநூ நிஜே பளபளாத்காராஞ்சநைஸ்ஸம்ஸ்க்ரியாத்'' என்று "காஞ்சீபுரியை நோக்கிப் பளபளவென்று தவடையில் அறைந்து கொள்ளும்'' என்று தெரிவித்திருந்தபடியே அவர் செய்து உய்ந்தாரென்று கேள்விப்பட்டிருப்பீரே, அப்படியே நான் செய்து உய்வேனாக.

நீர் வடமொழியில் அநுவதிக்கவேண்டிய தேசிக (தமிழ்) ஸ்ரீ ஸூக்திகளாவன

"*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹத யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரண களேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று......* என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கிழிருத்து மம்மானே* யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்.'' இந்த ஸ்ரீ ஸூக்திகள் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் தேசிகனால் எழுதப்பட்டவை. இவற்றை ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்க்கக்கடவீர்.

தமிழில் மொழிபெயர்க்க வேண்டிய ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்தியாவது ஆளவந்தார் அருளிச் செய்த கீதார்த்த ஸங்க்ரஹத்தில் "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத்தேவே து தாம் அபீ:' என்கிற (31) ச்லோகத்தின் ரக்ஷையில் "முக்தவ்யாபார ந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் 'க்ஷணிகஸ்ய' காலாந்தர பாவிபலஸாதநத்வாநுபபத்திர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாதிதி பாவ: அத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய:'' என்றிருப்பது. இதனோடுகூட "த்வய்யேகஸ்மிந் நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்'' என்கிற ந்யாஸதிலக ஸ்ரீ ஸூக்தியும் சேர்த்துக் கொள்வது. இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்திகளைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டியது. க்ருபையுடன் இந்த வேண்டுகோளை நிறைவேற்றுக.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# புனர்வஸு பர்யவேக்ஷணம்

(பத்ராதிபர்)

புனர்வஸு பத்ரிகையின் ஜுன் மீ 188லக்கங் கொண்ட இதழ் இன்று (15—7—73) வரப்பெற்றேரம். இதில் பத்ராதிபருடைய கட்டுரை யொன்று, ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் ஸ்வாமியின் கட்டுரையொன்று, நாவல்பாக்கம் வேள்விப்பன்றியாருடையகட்டுரையொன்று, ஆக மூன்று வியாஸங்களுள்ளன இவற்றுக்கு மறுப்பெழுத எழுகின்றேம். இந்த நமது மறுப்புரைக்குப் புனர்வஸு பர்யவேக்ஷணமென்று மகுடமிடப்பட்டுள்ளது. (1) புனர்வஸு ஈக்ஷணம். (2) புனர்வஸு பரீக்ஷணம் (3) புனர்வஸு அவேக்ஷணம் என்று மூன்று மகுடமாக இதனைக்கொள்க.

நமது ஸ்ரீராமாநுஜன் சென்ற மாதவிதழில் (298ல்) "அக்நிஹோத்ரகண்டகோத்தாரம்" என்கிற நூல் வெளிவந்திருப்பதை வைணவவுலகம் முழுதும் கண்டுகளித்திருக்கின்றது அக்களிப்பின் பரீவாஹமாக நமக்குக் கிடைத்திருக்கின்ற [ஸஹ்ருதயஸுஹ்ருந் மணிகளின்] கடிதங்கள் பல பல அந்நூலில் நாமெழுதியிருப்பவை மறுக்கப்பட வேண்டின் அந்த மறுப்பு ப்ரஹ்மஸ்ரீ ஐயங்காருடையதாக வெளிவந்திருக்க வேண்டும். அவர்வாளா விருந்திட்டார் அவர்க்கு ப்ரதிநிதிகளாக இருவர் கிளம்பியுள்ளார்கள். இருவரில் முதல்வர் ஸ்ரீ மதுராந்தகம் வீரராகவாசார்யஸ்வாமி. இவர் நமக்கு பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:. இந்த ஸ்வாமி நேற்று வைகாசி மாதத்தில் ஒரு விவாஹார்த்தமாகக் காஞ்சிக்கு எழுந்தருளியிருந்தபோது நம்முடைய நட்பு நீடித்திருக்க வேணுமென்று ஸாதித்தார். அடியேனும் அப்படியே வேண்டிக்கொண்டேன். நெடும்போது அளவளாவினேம். அடியேனுடைய அந்தரங்கஸுஹ்ருந்மணிகளில் இந்த ஸ்வாமி முன்னணியில் நிற்பவர். ஆனல் விஷய விசாரங்கள் ப்ராப்தமானுல் நாம் மனஸ்ஸாக்ஷ்யத்தை மீறமல் பேசவோ எழுதவோ நேர்கின்றது.

ப்ரக்ருதவிசாரத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநபத்ராதிபஸ்வாமி தமது பத்ரிகையில் இந்த மதுராந்தகஸ்வாமியை ப்ரஸ்தாவித்துச் சில எழுதியிருந்தார். இந்தஸ்வாமி புனர்வஸு பத்ரிகையின் ஆசிரியர் குழுவில் சேர்ந்தவராக (முதல்வராக) அதில் வெளிவந்துகொண்டிருப்பதால் இவர் தம்முடைய ஆர்ஜவத்தைப் பரிபாலித்துக் கொள்ளவேண்டியது. அவசியமென்று உத்போதனம் செய்ய வேண்டி அந்த ஸ்வாமி சில எழுதியிருந்தது யுக்தமே. இந்த ஸ்வாமியோ வென்னில் ............ மேலே என்ன எழுதுவது! (ஒரு சிறு கதை கேண்மின்) ஒரு ஜாமாதா ச்வசுரக்ருஹத்திற்குச் சென்றார். அவர் தந்ததாவனம் செய்கிற வழக்கமில்லாமையால் பல்லில் ஊத்தையேறிக்கிடந்தது. பல் துலக்கும்படி கூறின மாமனுர் ஒரு அணு கையில் கொடுத்து 'கடைவீதியில் கரும்பு விற்கிறது; வாங்கிச் சாப்பிட்டு வாரும்' என்று சொல்லியனுப்பினர். கரும்புரஸத்தினுல் ஊத்தை தொலையும்

என்பது மாமனுர் கருத்து. மாப்பிள்ளை என்னசெய்தாரென்னில். கரும்பின் விலை அதிகமாக விருந்தது கண்டு எள்ளுப்பிண்ணுக்கு மலிவாகக் கிடைக்கின்றதென்றறிந்து அரையணு கொடுத்து அதை மடிநிறைய வாங்கி. பாதி தாம் உண்டு பாதி மாமனுருக்குங் கொடுத்து ஒரு அணுவில் அரையணுவை மிச்சப்படுத்திக் கொண்டு வந்த பெருமையைப்பரக்கப்பேசத் தொடங்கினுர். ஜாமாதாவின் பல்லில் முன்னிலும் பன்மடங்கு அதிகமாக ஊத்தை ஏறிக் கிடந்தமை கண்ட மாமனுர் மிகவருந்தினுர் வேறு என்ன செய்வர் பாவம்! ஸுதர்சன பத்ராதிபர் எழுதியிருந்த பங்க்திகளை நம் மதுராந்தகம் ஸ்வாமி ஊன்றிநோக்காமலே அஸ்தாகே எதிரம்பு கோக்கத்தொடங்கிவிட்டார்.

ஸுதர்சன பத்ராதிப ஸ்வாமியோடு இவர்தமக்கு வேறுவிஷயங்களில் விவாதங்கள் கிளர்ந்திருப்பது உலகறிந்ததே அந்த வழியில் இவர் ஏதேனும் எழுதவிரும்பினுல் அது ப்ராப்தமேயாகும். ப்ரஹ்மஸ்ரீ ஐயங்கார் "ஜால்மோஸமீக்ஷ்யகாரீஸ்யாத்" என்ற அமர கோசத்தில் கண்ட ஜால்மன்படியிலே செய்த ஆசார்யதூஷணங்களை ஸமர்த்திக்க வெண்ணி "கீலோத்பாடிவ வாநர:" என்ற கதையை நினைவூட்டுபவராய் "ஆம்ராந்' ப்ருஷ்ட: கோவிதாரார் ஆசஷ்டே" என்ற ப்ரணுளியில் எழுதியுள்ளார்.

இவர் தமது கட்டுரையைத் தொடங்கும்போது (நாலுவரிகளுக்கு அப்பால்) ஏற்கனவே பூர்வாசாரிய தூஷண கண்டன கிரந்தங்கள் ஐந்து வெளியிட்டிருக்கிறேன். 1 ஸம்ப்ரதாயஸுதை 2. ஸாரகம நிஷ்கர்ஷம் 3. நிகஷ சததூஷணீ 4 தூஷண்யநு பந்தம் 5 ஸுதா நிஷ்கர்ஷ தூஷணீ விஜயம் என்பனவே அவை". என்று எழுதியுள்ளார். இவ்வைந்தில் முதன்மையாக இவர் குறிப்பிட்டுள்ள ஸம்ப்ரதாயஸுதா என்கிற சுவடி என்னுருவனை உத்தேசித்தே இவரால் எழுதப்பட்டது. (என் பெயர் அதில் இல்லையாயினும் என்னை நோக்கியதே அது என்பதை எனது மறுப்புரையில் ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளேன்.) சென்ற கார்த்திகை மாதத்தில் நாம் திருவரங்கம் பெரிய கோயில் விடை கொண்டிருந்த போது இந்த மதுராந்தக ஸ்வாமியின் ஒரு சிறு நூல் நமக்குக் கிடைத்தது. அப்போதே அதற்கு "பரவாதிசிரோபூஷா" என்னும் பெயருள்ள நமது மறுப்பு நூலை ஸ்ரீ ராமாநுஜனில் (291ல்) அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம் அதனுடைய ஸாரத்தை அந்நூலுக்கு முகவுரையாக "பரவாதிசிரோபூஷா ஸாரத்திரட்டு" என்னும் மகுடத்தில் வெளியிட்டிருக்கிறேன். அதை இதுவரை காணுதவர்களுக்கும் கண்டு மறந்தவர்களுக்கும் இங்கெடுத்துக் காட்டவேண்டுவது அவசியமாகிறது. காட்டுகிறோம் காண்மின்.

ஸ்ரீ:

ஸ்ரீ காஞ்சி. அண்ணங்கராசாரியர் இயற்றிய

## பரவாதிசிரோபூஷா ஸாரத்திரட்டு

—(o|o)—

பரவாதிசிரோபூஷா என்னுமிச் சிறுநூலின் பிரமேயத்தை ஸாரமாக எடுத்துரைக்கிறேனிங்கு இந்த ஸாரத்திரட்டை வாசித்தபிறகு நூலில் கண்ணைச்செலுத்த வேணு

மென்று தோன்றினுல் செலுத்திப் பார்ப்பது. ஸ்ரீமதுபயவே வித்வான். மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி சிலவாண்டுகட்கு முன்பு (ப்லவங்க வருடத்தில்) ஸம்ப்ரதாய ஸுதா என்றொரு சிறு நூலெழுதி வெளியிட்டார். அஃது அடியேனுக்கு மிகவும் தாமதித்துக் கிடைத்தது கிடைத்த மறுநாளே (பிலவங்க ஸூ தைமாதத்தில்) அந்நூலிலுள்ள அபத்தங்களையும் அஸம்பத்தங்களையும் விளக்கிக்காட்டி ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய மென்றொரு நூலை ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டேன். 229, 230, 235 ஆகிய மூன்று இதழ்களில் அந்த ஸாம்ராஜ்ய நூல் வெளிவந்து உலகம் பரவியுள்ளது. தனிப் புத்தகமாகவும் அது வெளியிடப்பட்டிருக்கின்றது. அதில் பிரபலமான சில சபதங்களையும் வெளியிட்டிருந்தேன். (அதாவது) சில விஷயங்களைக் குறிப்பிட்டு இவற்றுக்கு தேவரீர் ஆர்ஜவத்துடன் விடையிறுத்துவிட்டால் இதுகாறும் நான் நான்கு ப்ராஷைகளிலும் எழுதி வெளியிட்டுள்ள நூல்களையெல்லாம் கிழித்தெறிந்துவிட்டு அஜ்ஞாதவாஸம் செய்யக் கடவேனென்று. இப்படி நானெழுதி வெளியிட்டிருப்பதைக் கண்ட அந்த ஸ்வாமி என்ன செய்திருக்கவேண்டும்? சரக்கிருந்தால் உடனே விடையிறுத்து எனது நூல்களையெல்லாம் நானே கிழித்தெறியும்படி செய்திருக்கவேண்டும். கண்ணபிரானுடைய வேணுகான வைபவத்தை யருளிச்செய்யும் பெரியாழ்வார் "அம்பரந்திரியுங் காந்தப்பரெல்லாம் அமுதகீத வலையால் சுருக்குண்டு நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்து சோர்ந்து கைம்மறித்து நின்றனரே" என்ருரன்ருே? அந்தப் பாசுரத்தையே நினைவூட்டி நின்ருர் நம் மதுராந்தகம் ஸ்வாமி ஐம்பத்தொன்பது மாதங்கள் வாளா இருந்துவிட்டு அறுபதாவது மாதத்தில் திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டு [உலகம் உறங்குவதாக நினைத்து] தம்முடைய ஸுதா நூல் வெற்றிபெற்று விட்டதாக "ஸுதா விஜயம்" என்கிறவொரு சிறு சுவடியை வெளியிட்டிருக்கிருர்: [என்றைக்கு? 10—12—72ல்]—......அதுவும் வேறு சில நூல்களும் வெற்றிபெற்று விட்டதாக எழுதியுள்ளார்.

"நம் மதுராந்தகம் ஸ்வாமி வெற்றிபெறும் சுவடி யொன்றையும் எழுதப் பிறந்தாரல்லர்" என்றடியேன் திண்ணமாகத் தெரிவிப்பதைத் திடமாக எண்ணுமின். ஒரு நாளும் மறவேன்மின். போர்வீரரிருவர்க்கு ப்ரபலமான போர் நடக்கையில் அபரிமிதமாக அடிபட்டோடியுய்ந்த ஒரு வீரன் தான் உயிரோடு மீண்டதையே குவாலாகக் கொண்டு "நான் வெற்றிபெற்று விட்டேன்; எதிரியை நைப் புடைத்துவிட்டேன்" என்று பறை சாற்றிக்கொள்வது போல நம் மதுராந்தகம் ஸ்வாமி தாம் ஜீவித்திருப்பதையே கொண்டு தமது சுவடிகள் வெற்றிபெற்று விட்டதாக வெளியிட்டுக் கொள்வதில் வியப்புண்டோ?

இப்போதிவர் வெளியிட்டிருக்கும் சுவடி "ஸுதா நிஷ்கர்ஷ தூஷணீ விஜயம்" என்பது இதனுல் தமது மூன்று சுவடிகள் வெற்றிபெற்று விட்டதாகக் காட்டினுராயிற்று. மூன்றுக்கும் படுதோல்வியையொழிய ஒன்றுக்கும் சிறிதேனும் வெற்றியில்லையென்பதை விவேகிகள் தாமே உணர்வர்கள் ஸம்ப்ரதாய ஸுதா என்னும் இவரது சுவடி வெற்றி பெற்ற அழகை முன்னம் ஆராய்வோம்.

நாற்றிசைகளிலும் புலவர்கள் நாலாவகை நூல்களை யெழுதுகின்றனர். அச்சிடுகின்றனர்; வெளியிடுகின்றனர். அவை பெரும்பாலும் நமது பார்வைக்கு வரும் நாம் ஒவ்

வொன்றையும் பார்க்கத் தொடங்கும்போது "இந்நூலாசிரியர் வ்யுத்பந்நர்தானு? இவருடைய வ்யுத்பத்தி எத்தகைத்து? தர்மதர்மிஜ்ஞான முண்டா இவர்க்கு?" என்று இதையே நாம் முக்கியமாகப் பார்ப்பது. பலர் ஏராளமாகப் படித்திருக்கலாம்; விருதுகளும் (டைடல்கள்) பல பெற்றிருக்கலாம். ஆனுல் வ்யுத்பத்தியின் உத்பத்தி மாத்ரமும் அவர்கட்கு இராது. புதுக்கோட்டை கத்வால் வனபர்த்திகளில் வாக்யார்த்தம் சொல்ல வருபவர்களில் பலர் "கடத்வஸ்ய பூதலே வர்த்தமாநாத்" என்றுப்போலே வ்யவஹரிப்பர்களாம். "யூயம் வக்தவ்யம்" என்றும் கம்பீரமாக ஸாதிப்பர்களாம். ஜோடு சால்வை, 116ரூ. ஸன்மானம் பெறுவர்களாம்.

நமது மதுராந்தகம் ஸ்வாமியின் வ்யுத்பத்திபரிஸ்திதியை நாம் வெகு எளிதாகக் கண்டறிந்து காட்டியிருக்கிறேம். அதை நினைக்கும் போதே நமக்கு உண்மையில் அபரிமிதமான வருத்தமுண்டாகிறது. ப்ரமாதம் விப்ரலிப்ஸை எனப்படும் புருஷதோஷங்கள் மூன்றில் இவர்பால் எதைச் சொல்லலாமென்று பார்த்தால் ஒவ்வொன்றும் அஹமஹமிகயா இடம் பெற்றிருப்பதாகவே சொல்லவேண்டியதாகிறது விஷயம் கேண்மின்

## சரணுகதி கத்ய - உபக்ரம ஸ்ரீஸூக்தி

எம்பெருமானுர் சரணுகதி கத்யம் தொடங்குகையில் * பகவந்நாராயணேத்யாதி (முதல்) சூர்ணையாலே பெரிய பிராட்டியாரைச் சரணம்புக்கார். உடனே அடுத்த சூர்ணை அருளியிருப்பது பாரமார்த்திகேத்யாதி. இதில் செய்கதென்ன வென்றல். "கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்திகீ பகவச்சரணுரவிந்த சரணுகதிர் யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே" என்கையாலே கைங்கர்யாபேக்ஷையை முன்னிட்டு அதற்குறுப்பான சரணுகதி நிஷ்பத்தி பிரார்த்திக்கப்பட்டது. இந்த கத்யத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யரும் ஒரு வியாக்கியான மிட்டருளியிருப்பதால் அதில் கீழே குறிக்க இரண்டு சூர்ணைகளின் ப்ரமேயம் சுருக்கியுரைக்கப்பட்டது அப்படி யுரைத்த ஸ்ரீஸூக்தியாதெனில்,

"ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநுரூப புருஷார்த்த ப்ரார்த்தநம் ததுபாய ப்ரார்த்தநா பர்யந்தம் க்ருத்வா"

என்பது. இங்கு (ததுபாய ப்ரார்த்தநை) என்பதற்கு என்ன பொருளென்னில், கைங்கர்ய ப்ராப்திக்கு உபாயமான சரணுகதி நிஷ்பத்தியின் பிரார்த்தனை என்பது பொருள். தச் சப்தார்த்தம் கைங்கர்ய ப்ரார்த்தனையே யொழிய பிராட்டியன்று; உபாய ப்ரார்த்தநையென்பதற்கு உபாயபூத சரணுகதி நிஷ்பத்தி ப்ரார்த்தனையென்பது அர்த்தமேயொழிய பிராட்டி யிடத்தில் உபாயத்வ ப்ரார்த்தனை என்பது அர்த்தமேயன்று. அது மூலத்தில் ஒரு மூலையிலாவது இருந்தாலன்றே அதைக் கொள்ளலாம். (பிராட்டி பக்கலில் உபாயத்வ ப்ரார்த்தனை) என்றல் என்ன அர்த்தம்; ஸ்வாமிந் என்றல் வாய்திறக்க; வழியுண்டோ? "பாவே த்வதலௌ" என்ற அநுசாஸனத்தின்படி த்வப்ரத்யயமும் இங்கில்லை. பாவ ப்ரதாந நிர்தேசமென்று ஒன்றுண்டு; அதைக் கொள்ளலாமென்றுர் ஒரு மஹா பண்டிதர். முகமஸ்தீதி பாஷணம் தத்.

நம் மதுராந்தகம் ஸ்வாமி "ச்ருதப்காசிகாசார்யர் பிராட்டியின் உபாயத்வத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிங்கு" என்கிறார். இதை ப்ரம மென்னலாமா? ப்ரமாத மென்னலாமா? விப்ரலிப்ஸை யென்னலாமா? என்று ஒவ்வொருவரும் தடஸ்த வித்வான் களைக் கேட்டுப் பார்க்கலாம். மூன்றினுடையவும் ஸமாவேச மென்று தான் ஸத்யமாய்ச் சொல்லுவர்கள். ப்ரமித்து விட்டோமந்தோ! என்று அவர்தாமே திண்ணமாக எண்ணி யிருப்பர். ஐயமில்லை. அதஏவ அன்று முதலின்றறுதியாக வாயைக் கையைத் திறந்திலர். இந்த ப்ரமத்திற்கு எது மூலமென்னில். அபாதிதமான சாஸ்த்ர வ்யுத்பத்தியில்லாமையே யென்னத் தட்டில்லை......

## இவர் என் வினாக்களுக்கு விடைதர விரும்பினால்

ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமி விடையிறுக்க வேண்டிய எனது வினாக்கள் ஒன்றிரண் டல்ல; பலபலவுள்ளன. அவற்றுக்கெல்லாம் இவர் விடையிறுத்துவிட்டால் பிறகு தம் முடைய ஸுதா விஜயம் பெற்று விட்டதாக ஜயபேரி யடிக்கலாம். வெற்றிக்கொடி நாட்டலாம். நமது வினாக்களுக்கு இவர் இதுவரை விடையிறுக்க நினைத்திலர். ஒருகால் நினைத்தாராகில் எவ்விதமாக இறுப்பர் தெரியுமோ? கேண்மின்.

ஒரு பண்டிதர் மஹா கவியென்று பேரிட்டுக்கொண்டு சுலோகங்களியற்றுவர். ஸ்ரக்தராவ்ருத்தத்தில் ஆரம்பித்து சார்தூல விக்ரீடிதத்தில் தலைக்கட்டுவர். இவ்வண்ண மாகவே ஒரு காவியமெழுதிப் பண்டிதர்களைத் திரட்டி அரங்கேற்றினார். ஒன்றிரண்டு சுலோகங்களைக் கேட்டவுடனே வ்ருத்தபங்கம் வ்ருத்தபங்கம் என்று காதை மூடிக்கொண் டார்கள் வித்வான்கள். அப்போது இந்த கவி கூறுகிறார்—"ஆளவந்தார் மஹா வித்வான், மஹா கவி அவரே வ்ருத்தபங்க மயமாக சுலோகங்களை யியற்றி விட்டு முடிவில் "ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா" என்றார். (மத்தோஷ மசிந்தயித்வா) என்றோ, (மத்க்ருத்ய மசிந்தயித்வா) என்றோ ஸாதியாமல் (மத்வ்ருத்த மசிந்தயித்வா) என்று ஸாதித்ததன் உட் கருத்தைப் பெரியவாச்சான்பிள்ளையு மறிந்திலர். தேசிகனு மறிந்திலர். ஆளவந்தார் அநுஷ்டுப்பில் தொடங்கிப் பல வ்ருத்தங்களில் முடித்தாராதலால் அங்க வ்ருத்தக் கோளாறு களைப்பற்றி யாரும் சிந்திக்கலாகாது என்றார்; அவரே அப்படிச் சொல்லியிருக்க நான் எவ் வளவிலேன்?" என்றுகூறி முடித்தார் கேட்ட வித்வான்கள் ஸரிஸரி யென்று சொல்லி வாய் மூடிநின்றார்கள். இதேபோன்ற ஸமாதானங்களையே நம் மதுராந்தகம் ஸ்வாமி ஸாதித்தாகும்.

நம் மதுராந்தகம் ஸ்வாமி பக்கலில் தத்வஜிஜ்ஞாஸுக்கள் சிலர் வந்து தேசிக ஸம்ப்ரதாயக் கொள்கைகளையும் ஸ்ரீலோகாசார்ய ஸம்ப்ரதாயக் கொள்கைகளையும் ஸாதித் தருள வேணுமென்று கேட்டால், பகவத்க்ருபை ஸஹேதுக மென்பது தேசிக ஸித்தாந்தம். அது நிர்ஹேதுகமென்பது லோகாசார்ய ஸித்தாந்தம்; ஸித்தோபாயந்தான் கார்யகர மென்பர் அவர்கள். ஸாத்யோபாயமே கார்யகர மென்போம் நாம். பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமேயுள்ள தென்பர்கள் அவர்கள்; மோக்ஷப்ரதத்வமுமுண்டென்போம் நாம். ப்ரபத்தி உபாயமன்று என்பர் அவர்கள். அது உபாயமேயென்போம் நாம். பரகத ஸ்வீகாரமென்று ஒன்று சொல்லுவர் அவர்கள் ஸ்வகத ஸ்வீகாரத்திற்கு மேல் ஒன்று கிடையாது, பரகத ஸ்வீகாரமென்பது அர்த்தமில்லாத வார்த்தை என்போம் நாம் என்று இப்படி அடுக்கிக் கொண்டே போவர். கேட்டவர் யதாஜாதராயிருந்தால் அடியேன்! அடியேன்! என்று

தலையாட்டிப் போவர். அவர் தேசிக க்ரந்தங்களையும், என்னுடைய நூல்களையும் பார்த்தவராயிருந்தால் ஒரு நொடியில் இவரை வாய்மாளப் பண்ணுவர்.

—:(oo°oo):—

அன்பர்காள்! சென்ற 1972 ஜனவரி மாதத்தில் வெளிவந்த நமது ஸ்ரீ ராமாநுஜனில் விளங்கும் இந்த பரவாதிசிரோபூஷா என்கிற நூலுக்கு இவ்வளவும் முகவுரையாக அமைந்தது. நூலினுள்ளே இவரும் இவருடைய மதத்தினரும் "வாய்திறக்க வுண்டோவழி?" என்னும்படியான விஷயங்கள் பல பல வுள்ளன. அவற்றிற்கு விடையாக ஓரக்ஷரமும் இதுகாறும் எழுதினவரல்லர் எழுதப்போகிறவருமல்லர் இடையிடையே திடீர் திடீரென்று நினைத்துக்கொண்டு தமது ஸம்ப்ரதாயஸூதா வெற்றி பெற்றுவிட்டதாக ஒரு இந்திரஜாலம் காட்டப்புகுகிறார். ப்ரக்ருத பரவாதிசிரோபூஷா நூலிலிருந்து முக்கியமான சிற்சில விஷயங்களை மட்டுமே இங்கெடுத்துக் காட்டுகிறேன் காண்மின்.

ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமியை நோக்கி அடியேனெழுதிய
பழைய கட்டுரைகள் கிடக்கட்டும். இப்போதைய
விஜ்ஞாபனங்களைத் திருவுள்ளம் பற்றவேணும்.

ஸஹ்ருதய ஸூஹ்ருந்மணே ஸ்வாமிந்! தேவரீரையும் தேவரீர் போல்வாரையும் [அதாவது வடகலையரர்கள் எனப்படுபவர்களை] நிர்தேசிக்கவிரும்புமவர்கள், தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களென்றும் தேசிக பக்தர்களென்றும் நிர்தேசிப்பதுண்டு; அடியேன் அப்படியொருகாலும் நிர்தேசிப்பவனல்லேன். தேசிக பக்தம்மந்யர்கள், தேசிக ஸம்ப்ரதாயஸ்தம்மந்யர்கள்—என்றே நிர்தேசிப்பவனடியேன். இதுதான் பொருத்தமானது. உண்மையில் பண்டிதனல்லாத வொருவன் தன்னைப்பண்டிதனென்றும் பண்டிதராஜனென்றும் வெளியிட்டுக் கொண்டால் அந்த வ்யக்தியை விவேகிகள் நிர்தேசிக்கவேண்டும்போது "கோபி பண்டிதம்மந்ய:, கச்சந பண்டித ராஜம்மந்ய: என்று தம் கையாலெழுதுவர்களேயன்றி வேறு விதமாக எழுதமாட்டார்களன்றோ. அதே போலவே அடியேன் தேவரீர் வகுப்பினரை "தேசிகபக்தம்மந்யா: என்றும் தேசிக ஸம்ப்ரதாயஸ்தம்மந்யா: என்றுமே உண்மையுணர்ந்த நாள் முதலாக வ்யபதேசித்து வருகிறேன். ஸம்க்ஷேபருசியாலே 'நவீநா:' என்பது பெரும்பான்மை.

இதன் மேல் தேவரீர் கேட்கக்கூடிய தென்னவென்றால், "நாங்கள் உண்மையில் தேசிக பக்தர்களல்லோமோ? நாங்கள் கொண்டிருக்கிற ஸம்ப்ரதாயம் தேசிக ஸம்ப்ரதாயமன்றோ? என்று ஸ்வாமிந்! எதையும் அடியேன் ப்ரதிஜ்ஞாமாத்ரத்தோடு விடுபவனல்லேனென்பதும் ஆர அமர உபபாதித்தே விடுபவனென்பதும் தேவரீர் அறியாததன்று. இப்போது அனைவருமறிய உபபாதிக்கிறேன், இரண்டு வகைகளாலே உபபாதிக்கிறேன். (1) தேசிகனுடைய அர்ச்சாவதார திவ்யமங்கள விக்ரஹங்களுக்கு நீங்கள் நெடுநாளாகவே பாஹ்யர்கள்—என்பது முதல்வகை; (2) தேசிகனுடைய திவ்யஸூக்திகளுக்குப் பெரும்பாலும் பாஹ்யர்களென்பது இரண்டாம் வகை. இவ்விரண்டு வகைகளில் எந்த வகையை முக்கியமென்னலாமென்று பார்ப்பேன், இரண்டும் ஸமப்ரதானமேயென்பேன். முதல் வகையைப் பற்றிச் சிறிது கேளீர்.

திருவத்யயநோத்ஸவ மென்பது திவ்ய தேசங்கள் தோறும் நடைபெற்றாலும் திருவரங்கம் பெரிய கோவிலில் நடைபெறுவதே லோகோத்தரமென்பது பற்றிச் சொல்ல

வேணுமோ? ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஆச்சரியமாக எழுந்தருளி அற்புதமாக மஹோத்ஸவம் நடைபெறுகிறது.

"லுலுபே ஸ்வயமேவ சேதஸ:ா வரயோகிப்ரவரஸ்ய சிஷ்யதாம்" என்று எறும்பியப்பா பணித்தபடி அரங்கேசன் மணவாளமாமுனிகளுக்கு அந்தேவாஸியான படியால் மற்றுள்ள ஆழ்வாராசாரியர்களோடொப்ப மாமுனிகளுக்கும் தன்னுடைய திருவடி நிலையைத் தரிக்க வைப்பதில் அநௌசித்யங்கண்டு அவரை மட்டும் அவர் ஸன்னிதியிலேயே யிருத்திக் தன்னெதிரே நடக்கும் அருளிச் செயல்ஸேவை அங்கும் நடைபெறும்படி நியமித்தருளி, சிஷ்யக்ருத்யமாக [மாசிமாத க்ருஷ்ண த்வாதசியன்று] மாமுனிகளுக்கு திருவத்யயனோத்ஸவத்தை கோயில் பரிஜநபரிபர்ஹங்களையெல்லாமனுப்பிச் சிறப்பாக நடத்தி வைப்பது ஜகத் ப்ரஸித்தம். அம்மாமுனிகள் நிற்க. மற்றையாசாரியர்களோடொப்ப நம் நிகமாந்த மஹா குருவும் எழுந்தருளிக் கொண்டிருந்தவர் 1872 ஆம் ஆண்டு முதலாக [அதாவது ஏற்றக்குறைவின்றி ஒரு நூறு வருஷ காலமாக] திவ்ய கோஷ்டியிலன்வயத்தை (ஸ்வாமி தேசிகன்) இழந்திருப்பதற்கு ஹேதுவை தேவரீர் அறியமாட்டாதா? *அறியுமுலகெல்லா மென்கிறார் பொய்கையாழ்வார். தேசிகன் தம்முடைய திருநெற்றியில் சில பல நூற்றாண்டுகளாக வணிந்திருந்த திவ்யோர்த்வபுண்ட்ரத்தை க்ஷணகாலம் விபரீதமாக்கின தற்காக நீதிமன்றத்தில் ஆயிரக்கொரு ரூபாய் அபராதக் கட்டணம் செலுத்தி அதை மூன்று நீதிமன்றங்களிலும் ஊர்ஜிதப்படுத்திக் கொண்டு, ஸ்வாமியை அந்த திவ்ய கோஷ்டியில் அந்வயிக்கப் பெறாதபடி செய்து கொண்டிருப்பது தேசிக பக்தர்களின் செயலாகுமா என்பதை விவேகிக்க சக்தியில்லையே யந்தோ!

நம்மாழ்வார் திருவாய் மொழியில். தமது திருநெற்றியில் விளங்கும் ஊர்த்வ புண்ட்ரஸந்நிவேசத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்திருக்கின்றார். (1-9-10) *நெற்றியுள் நின்று என்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள் சூடிக். கற்றைத் துழாய் முடிக் கோலக் கண்ணபிரானைத் தொழுவார், ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் மற்றைய மரருமெல்லாம்* என்பது ஆழ்வார் பாசுரம். தமது திரு நெற்றியிலுள்ளதையே சிவனயனிந்திரன் முதலானுரெல்லாரும் அணிந்து கொண்டிருப்பதாக ஸாதிக்கிறார். ஊர்த்வ புண்ட்ர ஸந்நிவேசத்தை நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கிறார். [நிரைமலர்ப்பாதங்கள்] என்று முன்னேயுள்ள (நெற்றியுள் நின்றென்னையாளும்) என்னும் விசேஷணத்தை மறக்க வேண்டா அதற்கு விசேஷ்யம் [நிரை மலர்ப்பாதங்கள்] என்பது. புண்ட்ரம் ஏகபாதாகார மென்பாரைத்தள்ளுகிறது (பாதங்கள்) என்பது. நாஸிகாமூலத்தில் கமலாகாரமான பீடத்தை ஆதரியாதாரைத் தள்ளுகிறது (நிரை மலர்) என்பது. மேலே நாலாம்பத்தில் "தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானை" என்றருளிச்செய்வதை இங்குக் கூட்டி யநுஸந்திப்பது. ஆக ஆழ்வார் தமது விபவ காலத்தில் தம் திருநெற்றியிலணிந்து கொண்டிருந்ததாகத் தெரிவித்தருளின புண்ட்ராகாரமே இற்றைக்கும் அர்ச்சாஸ்தலங்களனைத்திலும், ஸகல ஆழ்வாராசாரியர்களின் திருவவதாரஸ்தலங்களிலும் அநாதி காலமாக உலகம் ஸேவித்து வாராநின்றது. இது அநாதியன்றென்றும். இடையில் ஏற்பட்ட விபர்யயமென்றும் (அதாவது எம்பெருமானுர் கூரத்தாழ்வானையிட்டுச் செய்வித்த தென்றும்) நீங்கள் எழுதியுள்ளீர்கள். இதை நான் 25 வருஷகாலமாக நூல் தோறும் எழுதிவருகிறேன். இதற்கு வாயைக்

கையைத் திறந்தவர்களல்லீர் நீங்கள் திருவரங்கம் பெரிய கோயிலில் அன்று முதலின்றுறுதியாகப் பிரபல மரியாதைகள் பெற்றுவரும் ஆசார்ய புருஷர்கள் பன்னிருவர். இப்பன்னிருவருள் ஒருவரையாவது குடிலோர்த்வ புண்ட்ரமணிந்தவராகக் காண்கிறீரோ ஸ்வாமின்! அக்காலத்தில் தேசிகனொருவர் மட்டும் குடிலோர்த்வ புண்ட்ரமணிந்து கொண்டிருந்தார் என்று தானே தேவரீர் ஸாதிக்க வேணும். ஸாதித்தருளீர்.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ஜிதபாஹ்யஜினாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்திவ ரங்கபுரே, மணி மண்டப வப்ரகணா! விததே பரகாலகவி:" என்று பொறித்து வைத்துள்ள சுலோகரத்னத்தின்படி விளங்கும் ப்ராகார கோபுரமண்டபாதிகளில் திகழும் திருமண்காப்பை ஸேவியாதவரா தேசிகன்? ஸேவித்திலர் என்கிறீரா? ஸேவித்து வைத்தும் "அந்யேந்த்ரகம் புவநம் அந்யதமிந்த்ரகம் வா கர்த்தும் க்ஷமே கவிரபூதயமந்வவாயே" என்று தாமே எழுதி வைத்திருக்கிற படியாயிற்று என்கிறீரா? உண்மையில் தத்வஜிஜ்ஞாஸையா கேட்குமடியேனுக்கு ஸ்வாமின்! உண்மையை புணர்த்தியருள வேணுமென்று ஸவிநயம் வேண்டுகிறேன். ஒரு நாளும் வடகலை ஸம்பந்த கந்தலவ லேசமுமில்லாத திருவல்லிக்கேணி திருவின்தளூர் முதலான திருப்பதிகளில் தேசிக திவ்ய மங்கள விக்ரஹம் எப்படிப் புகுந்திருக்குமென்று ஆலோசிக்க மாட்டிற்றிலீரே.

திருக்கச்சி நம்பிகளை இற்றைக்கும் தைவமாகக் கொண்டிருக்கிறார்கள் பேரி செட்டிமார்கள். அவர்கள் தங்கள் நெற்றியிலிடுவது நீறேயிருந்தாலும் இதையே நம்பிகளுக்கும் அணியச் செய்யவேணுமென்று முயன்றிலர். நெஞ்சாலும் நினைத்திலர்.

ஸ்வாமின்! மதுராந்தக மஹாஸ்வாமின்! தேவரீர்கள் அணிந்துவரும் புண்ட்ரஸந்நிவேசத்தை நவீனமென்று நாம் சொல்லுகின்றிலோம். நெஞ்சாலும் நினைக்கின்றிலோம். இதுவும் அநாதியாகவேயிருக்கலாம். என்ன சொல்லுகிறோம்? நம் முன்னோர்கள் ஆதரித்ததன்றிது. விசிஷ்ய தேசிகன் ஆதரித்ததன்று அன்று அன்று என்று உத்க்ருத்ய புஜ முச்யதே குடப்பாம்பில் கையிட்டுரைக்கின்றேன். திருவவதார ஸ்தலமான விளக்கொளி சன்னிதியில் புண்ட்ரஸந்நிவேசம் மாறின காலத்தை (வைகுண்டவாஸியான) திருப்புட்குழியப்பா ஸ்வாமி நீதிமன்றத்தில் பாக்ஸிலேறி வெளியிட்டதைப் பலகால் ரிகார்டுகளுடன் வெளியிட்டிருக்கிறேன். பிஷ்டபேஷணம் வேண்டா ஆக, நாம் உபபாதிக்க ப்ரதிஜ்ஞை செய்த இரு வகையில் ஒருவகையை உபபாதித்தாயிற்று. இனி இரண்டாவது வகை—(தேசிகனுதரித்த புண்ட்ரஸந்நிவேசத்திற் போல) அவராதரித்த அர்த்தங்களிலும் உங்களுக்கு அந்வய லேசமுமில்லை யென்பது.

தேசிக திவ்யக்ரந்தங்களில் அநாயாஸமாக விளங்கும் அர்த்தங்களில் ஒன்றையும் தேவரீர்கள் ஆதரித்து வரவில்லை யென்பதை நூற்றுக்கு மேற்பட்ட நூல்களில் விவரித்துள்ளேன். அவற்றுள் ஒன்றையே இங்குக்காட்டுகிறேன். தேசிகஹ்ருதயம் என்கிற அடியேனது நூல் ஏற்கனவே உலகம் பரவியுள்ளது அது ஸ்ரீராமாநுஜன் 141, 142 ஆகிய இரண்டு இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது. தேவரீருடைய திருக்கோயிலாழ்வாரிலும் விளங்குமதே அது அதை அநுதினமும் எடுத்து ஸேவிப்பது தவிர தேவரீரோ தேவரீரைச் சேர்ந்தவர்களோ வேறு எதுவும் செய்யமுடியாது என்பது சிலாலிகிதமே.

இனி ப்ரக்ருத விஷயங்கள் கேளீர்

ஸ்ரீ:

# மதுராந்தக வித்வானுக்கு மதுரமான விண்ணப்பம்.

(ச்லோகம்)

*ஸ்ரீ மதுராந்தக வித்வத் ஸவிதே ஸப்ரச்ரயம் நிவேதயதே*
*காஞ்சீவாதிபயங்கர வம்சீயாண்ணங்கராசார்ய:*

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் பத்தாம் பத்தில் 2, 3 ஆம் திருமொழிகளில் [இரக்கமின்றி, ஏத்துகின்றோம் பதிகங்களில்] ஓர் அபூர்வ விஷயம் அருளிச்செய்கிறார். (அதாவது) இலங்கையிலுள்ள சில பல அரக்கர்கள் ராம லக்ஷ்மண ஸுக்ரீவ ஹநுமதாதிகளைச் சரணம் புகுந்து உயிர்ப்பிச்சை பெற்று உய்ந்ததாக. அந்த அரக்கர்கள் ஸ்ரீ ராமாயணம் நடையாடாத விடங்களிற்சென்று "எங்களினத்தவர்களான ராவண கும்பகர்ணாதிகள் இலங்கையில் இனிது வாழ்ந்துகொண்டிருக்கின்றனர்" என்று பறைசாற்றினால் அதை அங்குள்ளார்கள் நம்பவுங் கூடும். ஸஹ்ருதய ஸஹ்ருத்வரேண்ய மதுராந்தக ஸ்வாமிந்! தேவரீருடைய ஸம்ப்ரதாய ஸுதை உயிரோடிருப்பதாக ஜம்புத்வீபே பாரதவர்ஷே பரத கண்டே மேரோர் தக்ஷிணே உத்தரே ச பார்ச்வே ஓரிடத்திலும் சொல்லிப் பிழைக்க முடியாதிடீர். (ஏனென்னில்) அந்த ஸுதாவுக்கு ப்ரத்யக்ஷ கண்டனமாகத் தோன்றின நமது ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமும், நமது வைதிக மனோஹராவில் அதற்கு மொழிபெயர்ப்பாக வெளிவந்த சமஸ்க்ருத வியாசங்களும் நடையாடாத விடமில்லையாதலால், உமது சுதை உண்மையாக வெற்றிபெற்றிருக்குமாகில் எனது சம்ப்ரதாய சாம்ராஜ்யத்தில் காணும கண்டனங்களுக்கும் கேள்விகளுக்கும் தேவரீர் எழுதியுள்ள சமாதானங்களை நான்கு அல்லது எட்டு பக்கங்களில் பலருமறியப் பிரசுரப்படுத்தியருளீர். காலதாமதஞ் செய்திடமல் 15—8—73 தேதிக்குள் இந்த வேண்டுகோளை நிறைவேற்றியருள வேணும். தேவரீர் எழுதுமவற்றிற்கு அடியேன் ஒருவாரத்திற்குள மறுப்பு வெளியிட்டு வருகிறனென்பதை உலகையறியும். இப்போது மப்படியே. தேவரீருக்கு நான்கு வாரங்கள் தவணை தந்திருக்கிறேன. அவசியமானல் ஆறு வாரங்களும் தருகிறேன்.

எனக்கு ஜ்யோதிச்சாஸ்த்ர பரிசயமு முண்டாகையால் பவிஷ்யத்தை இப்போதே தெரிவிக்கிறேன். நாலறு மாத காலம் வாளாவிருந்துவிட்டு, இதையெல்லாம் உலகம் மறந்துபோயிருக்குமென்று முடிவு செய்துகொண்டு, "ஐயங்கார வந்தால அடியைப் பிடி, முதலியார் வந்தால் முதலைப பிடி" என்னுங் கதையாக "நம்முடைய ஸுதா விஜயம்......" என்று தொடங்கப் போகிறீர். தாராளமாகத் தொடங்குமையா! மயிர் வளரவளர வபனம நடந்துகொண்டேயிருக்கின்றதன்றோ? விளையாடு சூழலில் புல் பூண்டுள முளைகக முளைகக் செதுக்கப் படுகின்றனவன்றோ? "அஸநாம் கர்யோபி நிர்வாபித:" என்கிற தேசிக திவ்யஸூக்தி அநநாளில் உங்களினத்தவர்களை நோக்கியேயன்றோ அவதரித்தது. அந்த ஸூக்தியை அவருடைய திருவருளாலே நாம் யாவசசரீரபாதம ஸம்ரக்ஷித்துவருவோம். இது நம்முடைய நவீன ப்ரதிஜ்ஞையன்று. இனி, ப்ரகருதவிஷயத்தில் எழுதுமவற்றைக் கடாக்ஷித்தருளவேணும்.

# புனர்வஸு பத்திரிகையிலுள்ள புல்லுரைகளைக் களைந் தொழித்தல்.

ஸ்வாமின்! இப்போது புனர்வஸுவில் தேவரீர் எழுதியிருப்பதாவது. "ஸுதா கிரந்தத்தை ஸப்தக் மஹோத்ஸவத்தில் குங்குமமப்பி குளிர் சாந்தம் மட்டித்து யானை மேல் மங்கல வீதி வலம் செய்வித்தான ஸ்ரீ ரங்கராஜன்" என்று. தேசிகன் ந்யாஸ விம்சதியில் சிஷ்யலக்ஷணம் சொல்லுகிற "ஸத்புத்திஸ் ஸாது ஸேவீ" என்கிற சுலோகத்தில் ஆறாவது விசேஷணம் "த்யக்தமாந:" என்பது. அதற்கு ஸாமாந்ய ஜநங்கள் சொல்லக்கூடிய அர்த்தம் 'மானத்தை விட்டவன' என்பதாம். அத்தகைய வ்யக்திதான் இப்படி எழுதிக்கொள்ள வேணும். ஸ்வைரிணி என்று ஒதுக்கப்பட்டவளைச் சிலர் பிடிவாதமாகப் பல்லக்கிலேற்றி ஊர்வலம செய்விக்கிறபடியை ஆங்காங்குக் கண்டு வருகிறோம். அப்படியே இதுவுமொன்று என்பதில் என்ன ஸந்தேஹம்?

மேலே 4 என்று லக்கமிட்டு எழுதியுள்ளீர் "ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவை வியாக்கியானத்திலே (நாமுடையோம்) ஸித்தஸாதனத்தைப் பற்றியவர்கள் இத்யாதியால ஸ்வகதஸ்வீகார நிஷ்டரை ஸித்தோபாய நிஷ்டரென்று அருளிச்செய்தார்" என்று. திருப்பாவைக்குள் "நாமுடையோம்" என்கிற சொல்தொடர் கடைத்திலே. எல்லாம் உம்முடைய மருள் வெள்ளம். கறவைகள பின் சென்று பாசுரத்தில் "யாமுடையோம" என்றதை நாமுடையோம் என்று மருண்டு விட்டேன் என்பீர். அவ்விடத்து வ்யாக்யான ஸ்ரீஸூக்தியை எடுத்துக்காட்டி விவரணங் காட்டியிருக்கவேணும். மர்க்கடகிசோர ந்யாயத்தைக் கனவிலும் காணுதீர்.

எழுதியுள்ளீர் "திருப்பாவையின் பெருமையை ஸர்வதோமுகமாக்கியுள்ளார் விமர்சகர்" என்று. நீயென்று விமர்சகரென்கிறீர். அவர் பெயரை உலகமறிய வேண்டாமா? திருப்பாணாழ்வார "மற்றொன்றினைக் காணாவே" என்றும், திருவடி "பாவோ நாந்யத்ர கச்சதி" என்றும் சொன்ன விடங்களில் "வேறு சொல்லுவதும அஸஹ்யமானபடி" என்று வ்யாக்யானம் அவதரித்துள்ளது. நீர் சொல்லுகிற விமர்சக வ்யக்தியின் பேர் சொல்லுகையும் உமக்கு அஸஹ்யமாயிற்றோ! உண்மையில் அவர் திருப்பாவையின் பெருமையை ஸர்வதோமுகமாக்கினவரோ நம் வாயிலாக அக்னிஹோத்ர கண்டகோத்காரம் அவதரிக்கச்செய்து அதன் மூலம் திருப்பாவையின் பெருமை ஸர்வதோமுகமாகும்படி செய்திருக்கிறாரென்பது உண்மையே.

ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் இரண்டாவது அங்கத்தில் "யதிபாஸ்கர யாதவப்ரகாசௌ [illegible] ப்ரவீணா [illegible] [illegible] சாதுரீதுரீணா:" என்று ஸ்வாமி அருளிச்செய்த ச்லோகரத்னமே இந்த [illegible] தகுந்தது. நீர் விமர்சகராகச் சொல்லுகிற வ்யக்திக்கு தூஷகரென்கிற பெயரே ஏற்றது. அவர் பாஸ்கர யாதவப்ரகாசதுல்யர் என்பதைச் சிந்தனை கொள்வீர்

நைஷத காவ்யத்தில் [illegible] ஸர்க்கம் தமயந்தியினுடைய சந்த்ரோபாலம்பம். "மேவு த[illegible]மதிய[illegible] [illegible]" என்கிற [illegible] [illegible] தமயந்தியை அவளுடைய தோழி [illegible]. (ச்லோகம் வருமாறு) [illegible] த்யஜதீதிம் அஹோ [illegible] அசண்டமரீசி: உதஞ்சதி ஜ்வலயதி ஸ்புடம ஆதப [illegible] அநுபவ வசஸா ஸகி லும்பஸி

இதில் "அநுபவம் வசஸா ஸகி லும்பஸி" என்றது 'கட்கூடானதை அபலபம் செய்கிறாயே' என்றபடி. அப்படியே தூஷகர் உலகமறியச்செய்திருக்கிற திருப்பாவை தூஷணங்களை நீர் அபலாபம் செய்கிறீர்.

## மதுராந்தக வித்வானை நோக்கி முக்யமான வினா

நம்முடைய கண்டகோத்தார நூலின் உபக்ரமம் தேவரீருடைய நினைவுக்கு வருகிறதா? நினைவூட்டுகிறேன். ப்ரம்ஹ ஸ்ரீ ஐயங்கார் என்கிற அவுகர் 16—12—65 தேதியன்று வெளிவந்த தினமணி பத்திரிகையில் த்ரிமூர்த்தி தத்துவத்தைப் பற்றின தமது பேச்சை வெளியிட்டிருக்கிறார். "படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களை நடத்தும் மும்மூர்த்திகளும் தங்களுக்கு மேலான மூலசக்தியின் கட்டளையை நிறைவேற்றுபவர்களே. அந்த மூல சக்தியைத்தான் சைவர்கள் சிவன் என்றும் வைணவர்கள் விஷ்ணு என்றும் அழைக்கின்றனர். எந்தப்பெயர்வைத்து அழைத்தாலும் ஒன்றுதான்" என்பதாக. இந்த அபசப்த ராசிகளை அந்த 1965 லேயே இரண்டு உபந்யாஸங்களினால் களைந்தொழித்தேன். அதில் இரண்டாவது உபந்யாஸம் தேசிக ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு அவுகருடைய துர்வாதங்களைக் கண்டித்ததாம். இதையெல்லாம் கண்டகோத்தாரத்தின் முகப்பில் விரிவாக எடுத்துக்காட்டியுள்ளேன். அவுகருடைய அந்த அபிப்ராயங்களை நீர் ஆமோதிப்பவரா· கண்டிப்பவரா என்பது உலகுக்குத் தெரியவேணும். அதைப்பற்றி நீர் ப்ரஸ்தாபமே செய்யவில்லை, இது ஆர்ஜவமன்று. நீர் அடுத்தபடி எழுதுமதில் இதை முதன்மையாகக் கொள்க.

புனர்வஸு பத்திரிகையின் தன்மையைத் தெரிவிக்கவந்த நீர் "வைஷ்ணவ ஸம்ப்ரதாயமல்லாத வேறு பெரியவர்களும் இதன் ஆசிரியர் குழுவிலிருக்கின்றார்கள்" என்றெழுதியுள்ளீர். "ஸம்ப்ரதாயமல்லாத பெரியவர்" என்று ஒரு சாஸ்த்ரஜ்ஞன் கையால் எழுதலாகுமா? ஸம்ப்ரதாயமல்லாத-என்றது (ஸம்ப்ரதாயவ்யதிரிக்த, என்றபடி. இந்த விசேஷணத்திற்கு எது விசேஷ்யமாயிருக்கத்தகும் என்பதைக்கூட ஆராயமாட்டாத நீர், அஸமஞ்ஜஸலேகனத்தை அனுவனவும் அறியாதவராயும் ஸம்ப்ரதிபக்ஷலேகன குசலரென்று ப்ரக்யாதி பெற்றவராயுமுள்ள ஸ்ரீமத் புத்தூர் (வக்கீல்) வாவதூகமணியோடு எதிரம்பு கோக்கப் புறப்படுவது என்னே! என்னே! இப்படியுமா ஒரு தலைவிதியிருக்கும்? "ஸம்ப்ரதாயஸ்தரல்லாத" என்று எழுதவறியாத உம்மை எதிரியாக்கியா நாமெழுதப்புகுவது? தர்ம தர்மிஜ்ஞான ஸாம்ராஜ்ய மிருந்தபடி இது!

இதைவிட சோசநீயமான மற்றொரெழுத்தையும் கேளீர். ஸ்ரீமதுபயவே புத்தூர் வாவதூகமணி ஸ்வாமியை அதிக்ஷேபிக்கப்புகுந்த நீர் "பூர்வாசார்ய அவுணமென்பது ஸுதர்சனருக்கு ப்ரதானப்ரதிதந்த்ரம்" என்றெழுதியுள்ளீர். ப்ரதிதந்த்ரமென்றசொல்லை நீர் கேள்விப்பட்டிருப் பவரே. அதன் பொருள் என்ன, அதை எங்கே ப்ரயோகிக்கவேணும் என்பதை அந்தோ அறிந்திலீரே! "யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாத் அவித்யாசம: ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரம்" என்பது ரஹஸ்யத்ரயஸாரச்லோகங்களிலொன்று. இதைக்கொண்டு "அத்வைதிகளை க்ஷேபிப்பது யதிஸார்வ பௌமருக்கு ப்ரதிதந்த்ரம் என்று நீர் எழுதி விடுவீர் போலும்! ப்ரதிதந்த்ரம் என்பது ஒரு தர்சனத்துக்கேயன்றி த்ரஷ்டாவுக்கன்று கிடீர். ஆழ்வார் ஒரு பரமார்த்தம் ஸாதிக்கத்திருவுள்ளம் பற்றி, பாசுரம் தொடங்கும்போதே "ஏபாவம்பரமே!" என்று முடிமேல் மோதிக்கொள்ளுகிறார். அதேபோல், செடுகான் வித்வானுயிருந்து இப்போது சிலகாலமாக மஹாவித்வானாகத் தொடங்கின உமக்கு இதைத் தெரிவிக்கவேண்டியதாயிற்றே! என்று முடிமேல் மோதிக்கொண்டே இஃதெழுதினோம்.

## திருப்புட்குழியப்பாஸ்வாமியின் கதையொன்று

காஞ்சிபுரியில் வியாபகராயிருந்த திருப்புட்குழி ஸ்வாமியென்பவர் வித்யார்த்தி தசையைக் கடந்தவுடனே புதுக்கோட்டை ஸதஸ்ஸுக்கு எள்ளினாராம். அங்கே பரீக்ஷாதிகாரி ந்யாயசாஸ்

நாத்தில் ப்ரத்வம்ஸாபாவலக்ஷணம் சொல்லும்படி பரீக்ஷித்தாராம். "ஸாதி: அநந்த: ப்ரத்வம்ஸாபாவ:" என்றாராம் திருப்புட்குழிஸ்வாமி. 'கிம் நாம அநந்தத்வம்?'' என்றாராம் பரீக்ஷகர். த்வம்ஸாப்ரதியோகித்வம் என்றாராம் திருப்புட்குழியார். "த்வம்ஸலக்ஷணே த்வம்ஸாப்ரதியோகித்வமென்றால் இது ஆத்மாச்ரய தோஷதுஷ்டமல்லவா? என்றாராம் பரீக்ஷகர். பதில்சொல்ல ஸ்புரிக்கவில்லையாம் ஸ்வாமிக்கு. ஒருமணிகாலம் ஆலோசித்திருந்தாராம். "பிற்பகலில்வந்து சொல்லும்; இப்போது எழுந்துபோம்" என்று சொல்லி ஸபாவிஸர்ஜனம் செய்தார்களாம். எழுந்துசென்றவர் "நாம் புறப்பட்டவேளை நல்லதன்று போலும்" என்று சொல்லிக்கொண்டே அப்போதே ஊருக்குத்திரும்பிவிட்டாராம். இனி நாம் சபைகளுக்குப்போவது சரியன்று; "ஸம்பாவநா யஸ்ய ஜிகாஸூட: ஸபாபுஜங்கி குணபம் தருண்ய:'' என்னப்பெற்ற தேசிகனைப்போலேயிருந்துவிடவேணும் என்று திடமாக ஸங்கல்பித்துக்கொண்டு யாவதாயுஷம் அப்படியே இருந்துவிட்டாராம். இதை அந்த ஸ்வாமியின் சரிதையில் எழுதிவைத்திருக்கக் காண்கிறோம். அதேபோல் நம் மதுராந்தகஸ்வாமி "இனி நாம் பேனாவைக்கையால் தொடுவதில்லை" என்று சபதம் செய்துகொண்டு அதை யாவதாயுஷம் பரிபாலித்திருப்பது நன்று என்று ஜிதபுத்த்யா ஸௌஹார்த்த பூம்நா ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறேன். எதனாலென்னில் மேலே விவரித்ததனால்தான்.

## "உண்டபோதொரு வார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையும்"

ஸ்ரீ வசன பூஷணதிவ்ய சாஸ்திரத்தில் ஆசார்ய நிஷ்டையின் பெருமையை விளக்கும் பிரகரணத்தில் "உண்டபோதொரு வார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே, அவர்கள் பாசுரம் கொண்டன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது. அவர்களைச் சிரித்திருப்பாரொருவருண்டாகில், அவர் பாசுரம் கொண்டறுதியிடுவோம்" என்ற ஸ்ரீ ஸூக்தி உள்ளது. அதை எடுத்துக்கொண்டு பரிஹாஸமுறையில் சிலவரிகள் எழுதுகிறார் மதுராந்தகர். தேசிகன் இந்த ஸ்ரீ ஸூக்தியையே சிந்தனைசெய்து "அன்பர்க்கே அவதரிக்குமாயன் நிற்க அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டும் தொல் வழியே நல் வழிகள் துணிவார்கட்கே" என்கிறபாட்டை எழுதிவைத்துள்ளார். இங்கு மதுரகவிகளுக்கு துன்பற்ற என்று அடைமொழி கொடுத்திருக்கிறார். ஆழ்வாரை ஸேவிப்பதற்கு முன்பு எம்பெருமானை அடிபணிந்திருந்து அவர் துன்புற்று இருந்ததாகவும் ஆழ்வாரை அடிபணிந்தபிறகே துன்பற்றதாகவும் இங்குத் தெரிவித்துள்ளார். இதை இவர் பரிஹஸிக்காமல் சிந்திக்க வேண்டும். பாதுகா ஸஹஸ்ரத்தில் "ப்ருசாதுர ஸஹோதர ப்ரணயபஞ்ஜன ஸ்வைரிணு பதே கிமபரேண மே" என்றொரு சுலோகமுள்ளது. பரதாழ்வானுக்கு பெருமான் பாதுகையைத்தாம் கொடுக்கவில்லை என்றும் அந்த பாதுகைகளே ராமனுடைய திருவடியின் பொல்லாங்கை நினைத்து இந்த துஸ்ஸஹவாஸம் நமக்கு வேண்டாவென்று வெறுத்து அதைவிட்டு ஓடிப்போய் விட்டதாக இந்த சுலோகம் தெரிவிக்கிறது. இந்த விசேஷார்த்தத்தை இவர் ஆனந்தமாக ப்ரவசனம் செய்யலாம்.

யதிராஜஸப்ததியில் "யதிஸ்மாபி: த்ருஷ்டம் மதமிஹ கலிதம்" என்று ஸாதித்து எம்பெருமானார் தரிசனத்தை நவீனமென்று கூறியுள்ளதை இவர் நித்ய பாராயணம் செய்யட்டும். அதில் இதி சேத்' இத்யாதி வார்த்தை ஒன்றுமில்லாமையினால் இது தேசிகன் திருவுள்ளமே என்று கொள்ள என்ன தடை?

## மணவாள மாமுனிகளும் ஜநந்யாசாரியரும்

இம்மதுராந்தகர் எழுதுகிறார் "ஜநந்யாசார்யருடைய சிஷ்யரான மணவாளமாமுனிகள்" என்று. இது இவருடைய குத்ஸித வார்த்தைகளில் ஒன்று. எம்பெருமானார்க்கு திருக்கச்சிநம்பி

பக்கலிலே இருந்தப்படிப்பத்திலே உள்ளபடி அறிந்தவர்கள் "ராமாநுஜார்யசேர் மான்யம்" என்றார்கள் அது மிக கம்பீரமான ஸ்ரீ ஸூக்தி: அதேபோல ஜார்யாசார்யர் மாமுனிகளுக்கு மான்யாயிருந்தார். என்றுமித்தலேயேயுள்ளது. தேசிகனைப்பற்றி உள்ளபடி உரைக்கப்புக்கால் அவருக்கு எத்தனை ஆசார்யர்கள் இருந்தார்கள் என்பது ப்ரமாணசரணர்க்கு விளங்கும். நாமே விளக்குவோம். அவருடைய ஸ்தோத்ரங்களில் அபீதிஸ்தவத்தையும் பகவத்த்யான ஸோபானத்தையும் எடுத்துக் கொள்வோம். அபீதிஸ்தவத்தில "நிரந்தரிபுஸம்பவே த்வசக ரங்கமுக்யே வ்போ! பரஸ்பர ஹிதைஷிணாம் பரிஸரேஷுமாம் வர்த்தய" என்று சுலோகமுள்ளது. இது சத்யமங்கலத்திலிருக்கையில் அதை ஆயிரம் முறை ஜபித்து அப்படியே மனோரதம் நிறைவேறப்பெற்று நம்பெருமாள ஸன்னிதி சேர்ந்த பிறகு பணித்த பகவத்தியான ஸோபானத்தில் "ரங்காஸ்தானே ரஸிக மஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத்ஸேவா விமல மனஸா வேங்கடேசோ". என்று முத்திரை இட்டு வைத்தார். ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த அசேஷசித்த ரஞ்சகர்களாய் ரஸிக வித்வத்ஸாவ பௌமர்களான ஆசார்யர்களின் திருவடி நிழலிலே ஒதுங்கி அதனாலே விமல மனஸ்காக ஆனேன் என்றார். அதாவது எற்கனவே மனத்திலிருந்த மலங்கள் நீங்கப்பெற்றதாக வாய்விட்டுச் கூறினாராயிற்று. ரஹஸ்ய நூலொன்றின் முடிவில் "விசுத்த தேசிகவரா ரங்கதாம்நி" என்று ச்லோகம் இயற்றியுள்ளார். ஸ்ரீரங்கத்தில் விசுத்தரான ஆசார்யரைப் பெற்றதாக அறிவித்தபடி. ஸ்ரீரங்கம் சேர்வதற்கு முன்பு இருந்த அசுத்தாசார்ய ஸம்பந்தம் கழிந்தமைக்கு உகந்து கூறினபடி இது.

அன்றியும் இவர்கள் தாம் சொல்லிவரும் வாழி திருநாமத்தில் "வாழியணி நாப்புல் வருநிக மாந்தாசிரியன், வாழியவன் பாதார விந்தமலர்—வாழியவன் கோயிலாத்தான் மகனைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் நீயிலா நல்லோர் திறன்" என்று கோஷித்து வருகிறார்கள். இதில் கோயிலாத்தான் மகனை என்றது தவறான பாடமென்றும் கோயிலாத்தான் மகனை என்பதுதான் ஸரியான பாடமென்றும் தேசிகன் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தபோது அந்தக் கோயிலாத்தானது திருக்குமாரரை ஆசார்யராகக் கொண்டு அவரிடத்தில் சிலநாள் காலக்ஷேபம் செய்தாரென்றும் இவர்கள் தேசிகன் எழுநூறு ஆண்டு நிறைவு கொண்டாட்டத்தில் வெளியிட்ட தேசிக சரித்திரத்தில் எழுதி வைத்திருக்கிறார்கள். அந்த மகனோ (அல்லது) மகளோ ஆசார்ய பதவியில் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். தேசிகன் திருவாக்கில் ஸ்பஷ்டமாக வெளிவந்த ஆசார்யரைக் கூறுகின்றேன் கேண்மின்.' திருவாய் மொழியில் (4—5—6) 'கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும் பெரிய கோலத் தடங்கண்ணன் என்கிற பாசுரத்தை எடுத்துக்கொண்டு சில சைவர்கள் கொக்கரித்த ஸமயத்தில் அவர்களை அடக்க வேண்டிய தேசிகன் தமது ஸச்சரித்திர ரக்ஷையில் ஆறுயிரப்படி வ்யாக்யானத்தைக் கண்வெடுத்தும் பாராமல் (அதிலுள்ள அர்த்தத்தை விட்டு) பெரிய வாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியிலுள்ள அர்த்தத்தை எழுதி 'இத்யாஹுராசார்யா,: என்று முடித்திருக்கிறார். இதனால் பெரியவாச்சான் பிள்ளையைத் தமக்கு ஆசார்யராக ஸ்பஷ்டமாகத் தெரிவித்தாராயிற்று. பகவத் கீதையில் ஏழாமத்தியாயத்தில் 'அஹம். ஸச மமப்ரிய: என்றவிடத்தில் தாத்பர்ய சந்திரிகையின் முடிவில் ரஸகனமான ஓர் அர்த்தத்தை எடுத்தெழுதி 'இதிகேசித்து ஆசார்யா:' என்று முடித்தார். மேலேகாட்டின ஸச்சரித்ர ரக்ஷையில் அங்ஙனன்றிக்கே 'இத்யாஹுராசார்யா:' என்றே வரைந்துள்ளார். அடைக்கலப்பத்துக்கு வ்யாக்யானமெழுதிய காஞ்சி ஜயாக்ருஷ்ண தாதாசார்யர் "எத்திசையுமுழன்றோடி இளைத்து விழுங் காகம் போல் ....... அடைக்கலம் நான் புகுந்தேனே" என்றவிடத்தில் "இவருக்கு ஆசார்யன் காகமே போலும்!" என்றெழுதி அச்சிட்டிருப்பதைக்காண்க. இப்படியாகத் தேசிகனுடைய ஆசார்ய கணங்கள் பெருகியுள்ளன. இவற்றையெல்லாம் நாம் இன்றாக எழுதாமலிருந்தோம், பன்முறையும் எழுதியுள்ளோம். வாயைக் கையைத் திறந்தவர்கள் அல்லர் இவர்கள். இப்போதாவது திறக்கட்டும்.

## தேசிகன் தனியன் அநுஸந்தானம் பற்றி

வானமாமலை மடத்தாரும் ப்ரதிவாதி பயங்கர வம்சத்தவர்களும் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபத்தில் தேசிகன் தனியனை இன்றைக்கும் அநுஸந்தித்து வருகிறார்கள் என்று எழுதுகிறார் மதுரார்த்தகர். இதைப்பற்றி நாம் பலகால் தெரிவித்திருக்கிறோம். இப்போது உலகமறியத் தெரிவிக்கிறோம். தேசிகன் ஆழ்வார்களில் திருப்பாணாழ்வார்போல்வாரைப் பற்றி விப்ரதிபத்தி சொல்லியிருந்தார். அதாவது திருப்பாணாழ்வார் நீசஜாதியாகையாலே உத்தமாச்ரமியான லோகஸாரங்கமஹா முனிகள் அவரைத் தோளில் தூக்கிக்கொண்டு ரங்கநாதன்ஸந்நிதிக்குள்ளே சென்றார் என்பதும். சதுர்த்த ஜாதியான நம்மாழ்வாரை ப்ராம்மணோத்தமரான மதுரகவிகள் ஆசாரியராகக் கொண்டாரென்பதும் மிகவும் அஸங்கதம், அஸம்பாவிதம் என்று கலங்கியிருந்தார். அந்தக் கலக்கத்தை சததூஷணியில் உலகமறியவும் காட்டியிருக்கிறார். விவரிக்கிறேன் கேண்மின். அந்த சததூஷணியில் 60-ஆவது வாதத்தில் "லக்ஷ்மீர்தர்மிண்யாம் ஆத்மஜாத்யாமிவ" இத்யாதி வாக்கியக் கோவை காணவேணும். அந்த வாக்கியங்களின் பொருள் யாதெனில், நம்முடைய தாயார் நமக்கு நமஸ்கரிக்கத்தக்கவராயிருந்தாலும் ரஜஸ்வலையான காலத்தில் எப்படி ஒதுக்கப்படுவார்களோ அப்படி நீசஜாதியர்களான ஆழ்வார்கள் விட்ட காலத்தில் ஒதுக்கப்பட்டே இருந்தார்கள். அவர்கள் அர்ச்சையில் தான் ஆதரிக்கப் பெற்றார்கள் என்றிவ்வாறெல்லாம் (அந்த சததூஷணியில்) எழுதி வைத்திருப்பதை கண்கூடாகக் காணலாம். இத்தகைய கலக்கங்கள் பிறகு வேதாசார்ய லேகையிலும் நீக்கப்பெற்றமையும் தாமே வெகு ஆச்சர்யமாகக் காட்டியுள்ளார்.

## இங்கே கவனிக்க வேணும்

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரானுக்கு வியாக்கியானமிடத் தொடங்கினர் நாயனுடவே அவதரித்துள்ள இரண்டு வ்யாக்யானங்களில் இல்லாத அர்த்தம் ஏதாவது எழுதினரோ என்று பார்த்தால் அதற்கு ப்ரஸக்தியேது? தாமெழுதிய வ்யாக்கியானத்திற்கு முனிவாஹனபோகம் என்று பெயரிட்டார். முனிவாஹனரென்றால் லோகஸாரங்க மஹா முனிகளை வாஹனமாகக் கொண்டவர் என்பது பொருள். சிற்சில காலங்களில் இந்த ஐதிஹ்யத்தில் தாம் விப்ரதிபத்தி சொல்லியிருந்தமைக்கு அநுதாபங்காட்டியன்றோ முனிவாஹன பதப்ரயோகம் பண்ணினார். முனிவாஹன போகம் என்றால் என்ன பொருள் என்பதையும் ஆராய வேண்டும். அதுகிடக்க இதை ஈஹாய்ய நூல்களில் ஒன்றாக அமைத்திருக்கின்றார். இதில் என்ன ரஹஸ்யமோ? அது ஸ்தம்பம் கவேணும். இதுவும் கிடக்க இந்நூலின் முடிவில் ஒரு பாட்டு இட்டிருக்கிறார். அதாவது—காண்பனவும் என்று தொடங்கி "வெண்பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே வேதாந்தவாசிய ரென்றிருப்பர் நின்றோம்; காண் பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பார் உளரென்று நாடுவோமே" என்று இதன் வந்திருப்பதன்றோ? வடமொழியிலோ தென்மொழியிலோ கண்டதுண்டோ? தேசிகன் திருவாக்கில் இத்தகைய பாசுரம் வேறு எங்கேனும் "நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்றவிது எவ்வளவு சம்ப்ரமானது! எதற்காக இதை இவ்விடத்திலே சொன்னார் என்பதை விமர்சிக்கவும் உமக்கு சக்தியில்லையா? தம்முடைய மனத்தில் முன்னம் தீது இருந்ததென்றும் பின்பு அது கழிந்து நன்மையுண்டாயிற்றென்றும் ஸ்பஷ்டமாகக் காட்டவில்லையா இது? எது என்றால் "நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்ற விப்பாசுரம். "ரங்காந்தாலோ-வித்வதேவா விமல மனஸா" என்ற ச்லோகத்தை இப்பாசுரத்தோடு கூட்டி அநுஸந்தித்தால் உண்மைப் பொருள் அல்பஜ்ஞனுக்கும் அவகாஹிக்கலாகுமே. இதனால் தேசிகனுக்கு திருந்தமுண்டான தசை ஸ்பஷ்டமாகத் தெரியவரவில்லையா? இதனால் தேசிகனுடைய தனியனை வானமாமலை மடத்தார், ப்ரதிவாதி பயங்கர வம்சத்தார் அநுஸந்திக்கிறார்கள் என்றால் இதில் என்ன வியப்பு? இதனால் இவர் என்ன ஸாதித்தாராகிறார்? இந்த மை உலருவதற்கு முன்னே இவர் விடையிறுத்தாக வேண்டாவா?

## ப்ரஹ்மஸ்ரீ பட்டத்தின் பரிசு

ஸ்ரீ ஸுதர்சன பத்ரிகையில் "ஸ்ரீ காஞ்சிஸ்வாமியால் ப்ரஹ்மஸ்ரீ பட்டம்பெற்ற அக்நிஹோத்ரி" என்றெழுதப்பட்டிருப்பதை மதாந்தர் அநுவதித்து அந்தப் பட்டத்தை மிகவும் நீஷகமாகச் சிலர் கருதியிருப்பதாகவெண்ணி "உன்மத்தாபோல். பித்தேபேறி" என்ற திருவாய்மொழியின்படியே தலைகால் தெரியாதே பித்தராய் ஏதேதோ எழுதியுள்ளார். இதனின் மிக்க சோசநீயமில்லை. அரசாங்கத்தார் ஸர், திவான்பஹதூர், ராவ்ஸாஹிப் ராவ்பஹதூர். முதலான பட்டங்களையும் பத்மஸ்ரீ; பத்மபூஷண, பத்மவிபூஷண இத்யாதி பட்டங்களையும் வழங்குவது போல வைதிககோஷ்டியார் ப்ரஹ்மபந்து, ப்ரஹ்மஸ்ரீ இத்யாதிபட்டங்களை உத்தமோத்தமப்ராஹ்மணர்களுக்குரிய சந்திரர்கள் ஏற்பட்ட காலம் முதல் வழங்கிவந்திருக்கிறார்கள். மிகமிகச்சிறந்த இப்பட்டத்தின் சிறப்பை அறியகில்லாத மதாந்தர் எண்ணெயிலிட்ட அப்பம்போல் கொதிக்கிறார்! குதிக்கிறார்!! இதனில்மிக்கோரயர்வுண்டோ?

ஒரு ஸ்வாமி தம்முடைய ஜாமாதாவுக்குக் கடிதமெழுதுகையில் "உ. வே. மாப்பிள்ளை ஸந்நிதிக்கு......" என்றெழுதியிருந்தார். உ. வே என்பதற்கு அர்த்தமறியாத ஜாமாதா ஒருவரிடஞ் சென்று இதற்கு என்னபொருள்? என்று கேட்க, (உ) உபயோகமற்றவன், (வே)-வேதனை என்று அர்த்தமென்று கூறினதோடு நில்லாமல் "அப்பா! உன் மாமனுருக்கு உன்மேல் இவ்வளவு க்ஷாத்திரம் எதனாலுண்டாயிற்று?" என்று சில கேள்விகள் கேட்டு அவனைக்குத்திக் கிளப்பிவிட்டார். உடனே ஜாமாதா மாமனுருக்குக் கடிதமெழுதத் தொடங்கி "ஓய்! நானன்று உவே; நீர் உவே, உங்கள் தகப்பனார் உவே, பாட்டனார் உவே, கொள் பாட்டனார் உவே, உமது வம்சபரம்பரையே உ. வே. ஜாக்கிரதை உஷார்! கபட்தார்!!" என்று நிரம்ப எழுதித்தீர்த்துவிட்டார். யார்? ஜாமாதா. இக்கதையையே நினைவூட்டி நிற்கிறார் மதாந்தர். ஆனாலும் இப்பட்டத்தின் சீர்மையறிந்த நல்லவர் இதை அலப்யலாபமாகவே எண்ணியுகப்பர்.

---

## புனர்வஸு பத்ராதிபரை நோக்கி

### ஸ்ரீமதுபயவே. பரமாப்தரான பத்ராதிபஸ்வாமிக்கு

விண்ணப்பம். 25, 30 வருஷங்களுக்கு மேலாக நான் உம்முடைய பரம ஸாத்விகத் தன்மையை அநுபவித்து அகங்குளிர நிற்பவன். உமக்குக் கலாவைஷம்யமென்பது அடியோடு கிடையாதென்பதை அடிக்கடி ப்ராப்தமாகிற ஸல்லாபத்தினால் நன்கறிவேன். ஆண்டுதோறும் தேவப்பெருமாளுடைய பழையசீவர மஹோத்ஸவத்தில் பெரும்பாலும் உம்முடைய காட்சி கிடைத்து வருகிறது. "தேவப்பெருமாளை ஸேவிப்பதற்காக வருகின்றிலேன், உம்மோடு ஸம்பாஷிக்கவே வருகின்றேன்" என்று நாம் பரஸ்பரம் சொல்லிக்கொள்வதைச் சிலரேயறிவர். அது நிற்க. நீர் புனர்வஸு பத்திரிகை நடத்தி வருவது ஸ்ரீராமபக்தி விசேஷத்தினால்தான், ஸ்ரீராம குணகணங்களை உலகமெல்லாமறிந்து உய்ய வேணுமென்கிற கருத்தினால்தான் என்பதை நன்குணர்வேன். ஆனால், புனர்வஸுவென்ற பத்திரிகைப் பெயர்க்குத் தக்கபடி ஸ்ரீராமகுணாநுபவபரங்களான கட்டுரைகளைத் தருவித்து வெளியிடுவதோடு நில்லாமல், அபத்தங்களும் அஸம்பத்தங்களும் மலிந்த—மிக வெறுக்கத் தக்க கட்டுரைகளையும் சேர்த்து "அம்ருதம் விஷஸம்ஸ்ப்ருஷ்டம்" என்னும்படியாக வெளியிட்டு வருவது உம்முடைய பெருமைக்குத் தகாதென்பதைப் பலகால் நேரில் சொல்லியிருக்கிறேன். "என் பத்திரிகையில் வெளிவரும் கட்டுரைகளை நான் அதைப் பலரறிய தெரிவிக்கிறேனிங்கு. "என் பத்திரிகையில் வெளிவரும் கட்டுரைகளை நான் வாசிக்கிற வழக்கமேயில்லை" என்று நீர் கூறுவதை மறந்திலேன். பத்ராதிபர்க்கு இதுபாங்கன்று.

பார்த்தாலும் அவற்றிலுள்ள நன்மை தீமைகளைத் தெரிந்துகொள்ளும் ஆற்றலில்லையேயெனில் தகுந்த விவேகிகளான அறிஞர்களை நியமித்தாவது கவனிக்கச் செய்ய வேண்டாவா? புத்தவாதிகளிடத்தில் சிற்றங்கொள்வது தகுதியன்று. "செய்வன திருந்தச் செய்" என்றதை மறக்கலாகாது- உபேக்ஷிக்கலாகாது. "ஆழ்வார்கள் கண்ட ராமன்" என்றொரு தலைப்பு நெடுநாளாகத் தொடர்ந்து வருகிறது. உப்பு புளிப்பு ஏதேனுமுண்டோ? ப்ரக்ருத 188 புனர்வஸுவையே எடுத்துக்கொள்ளலாம். "பட்டுக்கோட்டைக்கு எதுவழி என்றால் கொட்டைப் பாக்கு எட்டு வீசை என்றான்" என்ற கதையாகத் தானே இருக்கிறது. "சுடர்கொடியின் சொல்லமுதம்" என்ற கட்டுரையும் ஓயாது வருகின்றது. "அவர் இடிந்தொழிந்தால் அதில் பூசியிருந்த கரியும் ஒழியும்" என்கிற உலகச் சொல் பொய்யாகி விட்டது. 'வாழபழம்' என்று வாயாற் சொல்லிவிடலாம். எழுதும்போது அப்படி எழுதலாமா? வாழைப்பழ மென்றெழுத வேண்டாவா? சுடர்க்கொடி என்பது தவிர சுடர்கொடியென்றுண்டா? திருவாய்மொழியில் கங்குல் சிவந்து பதிகத்தில் "ஆடல் பறவையுயர்கொடி" என்றுள்ளது. அங்கு உயர்கொடியேயல்லது உயர்க்கொடியல்ல. சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே யல்லது சுடர்கொடியல்ல. உள்ளே கொள்ளை கொள்வோயாகவுள்ள அவத்தங்களை அறியகில்லீரெனினும் சுடர்கொடியவத்தத்தைக் கூட அறிந்திலீரென்றால் என் சொல்வதந்தோ! பலகாலுணர்த்தியுமன்றோ தெளியவில்லீர் வாதத்திற்கு மருந்துண்டு பிடிவாதத்திற்கு மருந்தில்லை என்கிற வசனத்திற்கு நீர்கூட இலக்காகலாமா? இதைப்பற்றி நான் தெரிவிப்பதிருக்கட்டும். புனர்வஸுவை வாங்கி வாசிப்பவர்கள் நூறுபேர்களாவது இருக்கமாட்டார்களா? அவர்களில் சிலராவது விவேகிகளாக இருக்கமாட்டார்களா? அவர்களில் ஒருவரும் இந்தத் தவற்றை தேவரீருக்குத் தெரிவிக்கவில்லையா? அந்த மருட்டின் கீழ்வரும் அர்த்தங்களில் சுவையென்பது லவலேசமும் இல்லை என்பதைக்கூடவா நீர் தெரிந்துகொள்ளவில்லை? "நான்தான் கட்டுரைகளில் கண் செலுத்துவதில்லை என்பதைச் சொல்லிவிட்டேனே" என்பீரேல் இந்த ப்ரஸங்கத்தை நிறுத்திக்கொண்டேன்.

நமது ஸ்ரீராமாநுஜன் 298-ல் வெளிவந்த அக்னிஹோத்ர கண்டகோத்தாரம் என்கிற வ்யாஸத்தை நீர் வாசித்துப் பார்த்ததாகவே காட்டவில்லை. உமக்கு ஸ்ரீராமாநுஜனைத் தவறாது அனுப்பி வருகிறோம். இனியாவது அந்த கண்டகோத்தார கட்டுரையை வாசித்துப்பார்த்துத் தெளிவு பெறுவது நலம். ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் ஆண்டாள் ஸ்ரீஸூக்திகளையும் கண்டவாறு தூஷித்திருக்கின்றவரை தூஷகர் என்று நிர்தேசியாமல் விமர்சகர் என்று நிர்தேசிப்பது வெகு ஸாஹஸம். புனர்வஸு பத்திரிகை தோன்றின நாள்முதல் அதில் உம்முடைய சொந்த கட்டுரையாக எதும் வெளிவந்ததாகக் கண்டிலோம். இப்போது (189ல்) ஆசிரியர் என்று கையெழுத்திட்டு திருப்பாவை விமர்சனம் என்ற குடன்கொண்ட ஒரு கட்டுரையை வெளியிட்டிருப்பதானது மிகமிக வெறுக்கத்தக்கதாக உள்ளது- அது நீர் எழுதினதன்றென்றும் தூஷகர் எழுதிக்கொடுத்ததை அப்படியே அச்சிட்டிருக்கிறீரென்றும் குடப்பாம்பில் கையிட்டுரைக்கின்றார்கள் பலர். அதிலுள்ள சில வாக்கியங்களை இதோ உதாஹரிக்கிறேன், "திருப்பாவை உபந்யாஸங்களில் சிலர் பொருத்தமில்லாமல் பாட்டின் அர்த்தத்தையே தங்களுக்குத் தகுந்தபடி மாற்றியும் சில சமயம் கேட்பவர்களுக்கு புரியாத வண்ணமும், இல்லாத இடத்திலும் மிக்க கேவலமான சாமாநபாவத்தையும் வெளிப்படுத்தி வருவதை "வேதமனைத்துக்கும் வித்து" என்று கொண்டு போற்றி மகிழும் பெரியோர் இதை ஸகிக்காதிருப்பதையும் கொண்டு அவ்வித உபந்யாஸங்களில் பெரும்பாலும் நிகழும் சிலவற்றை நம் விமர்சகர் சென்ற சஞ்சிகையில் வெளியிட்டுள்ளதை ........................" இந்த வாக்கியங்கள் மனச்சாட்சிக்கு மிகவும் மாறுபட்டவை, கைகாட்டிப் பேர்வழிகள் எழுதியவை. நீர் எத்தனை இடங்களில் திருப்பாவை கேட்டீர்? பூர்வாசார்ய வ்யாக்யானங்களில் ஏதேனும் பரிசயம் செய்திருக்கிறீரா? யாரை ஆசாரியராகக் கொண்டீர்?

திருப்பாவை மூலமாவது உமக்குத் தெரியுமா? என்று கேட்டால் என்ன செய்வீரென்பதை நேரில் காண விரும்புகிறேன். திருப்பாவை சொல்லுகிறவர்கள் தம்தம் மனம்போனபடி எதையோ சொல்லுகிறார்களென்றே வைத்துக்கொள்வோம். அவற்றுக்கு மனம் போந்து எழுதும் கட்டுரையில் பூர்வாசார்ய நிந்தைகள் புகுவதற்கு என்ன ப்ரஸக்தி?

இப்போது நீர் எழுதியுள்ள கட்டுரைக்கும் திருப்பாவை விமர்சனம் என்று நீர் இட்டிருக்கிற மகுடத்திற்கும் சம்பந்தமாவது உண்டா? திருப்பாவையில் என்ன விமர்சனம் நீர் செய்திருக்கிறீர்? ஸுதர்சன பத்ராதிபரை பரிஹஸித்து மேலும் எழுதியிருக்கிறீர். "விமர்சகரையே விஷயமாக்கி அவருடைய தாழ்மைகளையே கூறிக் கண்டனம் செய்திருக்கிறார்" என்று. இவ்வளவு அசட்டுத்தனமாக நீர் எழுதியிருக்கமாட்டீர் என்பது எனது நம்பிக்கை. விமர்சகருடைய தாழ்மைகளை என்பதற்கு விமர்சகரிடத்திலே உள்ள தாழ்மைகளை என்பது பொருளாகுமேயல்லது வேறு எவ்விதமாகவும் பொருளாகமாட்டாது. "விமர்சகர்க்கு இல்லாத தாழ்மைகளை ஏறிட்டுக் கூறி" என்று எழுதியிருக்க வேண்டும். இதை எழுதிக் கொடுத்தவர் உண்மையிலே தாழ்மைகள் கொண்டவராதலால் இங்ஙனே வாக்கு அமைந்தது என்பதில் என்ன ஸந்தேகம்? அவர்கள் 1, 2, 3 ............... 12 என்று லக்கமிட்டு ஏதோ பெரிய விஷயங்கள் எழுதியிருப்பதாகவும் அவற்றிற்கு ஒரு பதிலும் வரவில்லையென்றும் எழுதி இருக்கிறீர். இப்படி எழுதவேண்டிய கடமை உமக்குக் கிடையாது. லக்கமிட்டு எழுதினவர் யாரோ அவரன்றோ எனது லக்கங்களுக்கு விடைபெறவில்லை என்று கதறவேண்டும்? ஒவ்வொரு லக்கத்தையும் எடுத்துக்காட்டி நான் ஸ்ரீராமாநுஜனில் எழுதியிருப்பவை உமது கண்ணில் படாத காரணம் என்ன? ஸுதர்சன பத்திரிகையில் என்னுடைய ப்ரஸ்தாபம் வந்தே இருக்கிறது. என்னுடைய பத்திரிகையும் உமக்குக் கிடைத்திருக்கிறது. தத்துவம் இங்ஙனே இருக்க அஸம்பத்தமாக ஒருவர் எழுதிக் கொடுத்ததை உமது பெயரால் வெளியிட்டுக்கொண்டது அழகல்ல. ஸுதர்சன பத்ராதிபருடைய வ்யாஸத்தில் இரண்டு பாராக்களில் 3 என்றே இருப்பதாகக் குறைகாட்டியிருக்கிறீர். அதே புனர்வஸு 188ல் மதுராந்தகஸ்வாமியின் கட்டுரையில் 1. 2, 3, 4 என்று லக்கமிட்டு 5 என்பதை அறவே விட்டு 6 என்று மேலே போயிருக்கிறாரே இந்தத் தவறு உமது கண்ணில் ஏன் படவில்லை? நீர் மறுவாய் திறக்க முடியாதபடி ஸுதர்சன பத்திரிகையில் விரைவில் மறுப்புரை வெளிவருமாதலால் உம்மைப் பற்றின அளவில் இவ்வளவோடு நான் நிற்கிறேன். திருப்பாவை விமர்சனம் என்கிற அர்த்தமில்லாத மகுடங்கொண்ட கட்டுரையை நான்தான் எழுதினேனென்று மனப்பூர்வமாகச் சொல்லுவீரா? நாவல்பாக்கம் பண்டிதர் ஒருவருடைய பெயரால் நீர் வெளியிட்டிருக்கிற கட்டுரையும் இப்பத்திரிகைக்குச் சிறிதும் ஏலாது. "என்னுடைய பத்திரிகை ராமகுணாநுபவத்திற்கென்றே ஏற்பட்டது" என்ற உமது வார்த்தை அர்த்தமற்றதாயிற்றே! நமது அடுத்த கட்டுரையையும் நோக்குவீராக!

## நாவல்பாக்கம் வேள்விப்பன்றியாரின் வீறாவாரம்

விச்வாமித்ரயாகத்தில் உயிர்தப்பிப்போன மாரீசன் மீண்டும் பஞ்சவடியில் மாயமானாக வந்து மாண்டதாகப் பலர் நினைத்திருக்கின்றனர். இடையிலும் ஒருமுறை தீங்குசெய்து பிழைத்து மூன்றாவது தடவையாகவே முடிந்தனனென்பது தத்துவம். அதேபோல இந்தவேள்விப்பன்றியாருக்கு இப்போது மூன்றாவது தடவையான முடிவுகாண்மின். ஸ்வாமி தேசிகன் பாதுகாஸஹஸ்ரமருளிச்செய்த பின்பு 'ஸந்த்யே ஸஹகாரயுவதிஸ் ஸந்ததம் அத்யர்த்ததர்ப்பபகம் ஜயதி' என்றொரு ச்லோகமருளிச் செய்ததாக இவர்கள் எழுதிவைத்திருக்கின்றார்கள். அந்த ஸஹகாரயுவதியின் பரம்பரையிலே வந்திருக்கின்ற வேள்விப்பன்றி எழுதியுள்ளவற்றைக் கிள்ளிக்களைந்திடுவோம். "பகல்கண்டகுழியிலே இரா விழுவாரைப்போலே" என்பது ஆசார்ய ஸூக்திகளில் ஒன்று. பகல்கண்டகுழியிலே பகலிலேயே விழுவாருமுண்டே. அன்னவர்களில் முன்னமை பெற்றதிப்பன்றி. அவர்கள் தமது அபத்தக்கட்டுரையில் "தமிழ்நாட்டு வரலாற்றோடு இணைந்துள்ள திருப்பாவையை அதினின்றும் வேறுபடுத்திப் பிறநூல்கள் உதவியைக் கொண்டு விளக்கம் கூறுவது ஏற்கக்கூடியதேயில்லை" என்றெழுதியிருந்தார். இதில், "ஏற்கக்கூடியதேயில்லை" என்கிற ப்ரயோகத்தின் அஸாமஞ்ஜஸ்யத்தை நமது கண்டகோத்தாரத்தில் பக்கம் 24ல்,

## ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு ஸ்வாமி

இந்தப் பன்றியார் கீர்த்திமூர்த்தியான காரப்பங்காடு ஸ்வாமியை அஸ்த்
தானே ப்ரஸ்தாபித்து ஏதோ எழுதுகிறார். அந்த ஸ்வாமிக்கு நாம் "உபய
வேதாந்த வித்யா நிதி" என்று பிருதளித்திருப்பதை நமது ஸ்ரீராமாநுஜனை ஆநு
பூர்வியாக வாசித்தவர்கள் அறிவர்கள். உலகத்தில் ஒரே ஸம்ப்ரதாயத்திலுள்ள
வர்களுக்கும் பல பல அபிப்ராயபேதங்களைக் காணுநின்றோம். ஸ்ரீமத். கருடபுரம்
ஸ்வாமியின் ஸஞ்சிகையை மறுத்துக் கோழியாலம் ஸ்வாமி எழுதினதும் அவருடைய
ஸஞ்சிகையை மறுத்துக் கருடபுரம் ஸ்வாமி எழுதினதும் மறையவில்லை. இச் சிறு
விஷயம்கிடக்க. உக்தி நிஷ்டை, ஆசார்ய நிஷ்டை, குநிஷ்டை என்கிறவற்றைப் பற்றி
மடத்து வித்வான்களுக்கும் முநித்ரய வித்வான்களுக்கும் நடந்த க்ரந்தச்சண்டை
கள் அபரிமிதம் அக்காலத்தில் இஞ்சிமேட்டழகிய சிங்கர் போல்வாரும் நவநீதம்
ஸ்வாமி போல்வாரும் ப்ரதித்வந்த்விகளாயிருந்து எழுதிய கட்டுரைகளும் திட்டுரை
களும் பல லைப்ரரிகளில் சேமிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்றை நினைவூட்டுகிறேன்.
அந்த க்ரந்தச் சண்டை ப்ரபலமாக நடந்து கொண்டிருந்த காலத்தில் ஸ்ரீமான்.
உ. வே. (விவேகி வித்வத் ஸார்வபௌம) நவநீதம் ஸ்ரீராம தேசிகர் மதுரை ப்ராந்
தத்தில் ஓரூரில் ஸம்ஸ்க்ருதோபாத்யாயராக இருந்துவந்தார். அப்போது அவர்
நமக்கு எழுதிய கடிதம் சேமிக்கப்பட்டுள்ளது. என்ன எழுதியிருக்கிறாரென்றால்
"இந்த நிஷ்டா விஷய விசாரத்தில் தேவரீர் ஒரு க்ரந்தம் எழுதினால் தான் வித்வான்
களுக்குத் தெளிவு பிறக்கும்" என்று. ஆகவே ஏக ஸம்ப்ரதாயஸ்த்தர்களிலேயே
பலபல அபிப்ராய பேதங்கள் விளைவதும் க்ரந்தமூலமாகப் போராடுவதும்
அஸம்பாவிதமன்றென்று கொள்க. ஜயந்திபாரணாதிகளான பல விஷயங்களில்
மட முநித்ரயத்தார்களுக்குள்ள மதிபேதங்கள் பேர்க்கவும் பேராதவை.

"பன்னிரண்டு விஷயங்களில் ஒன்றுக்காவது பதில்......"

பன்னிரண்டு விஷயங்கள் எழுதியிருப்ப
தூஷகரென்று பெயர்பெற்றவர் பன்னிரண்டு விஷயங்கள் எழுதியிருப்ப
தாகவும் அதில் ஒன்றுக்குக்கூடப் பதில் வரவில்லை என்றும் ப்ரலாபம் செய்வது
நமது ஸ்ரீராமாநுஜனைக் கண்டவர்கள் செய்யுமதன்று. ஸ்ரீ ராமாநுஜன் (298)
இதழை மறுபடியும் எடுத்து வாசிக்க. தூஷகர் லக்கமிட்டெழுதிய தூஷணங்களில்
ஒன்றையும் விடாமல் நாமும் லக்கமிட்டே எழுதியுள்ளோம். அதில் பன்னிரண்
டாவது லக்கமிட்டு நாமெழுதியிருப்பதை இங்கநுவதிக்கிறோம்.

"கடைசியாக 12 லக்கமிட்ட பாராவை முடிக்கின்றவிவர் 'கருணையாலேயே
தேவதை பலம் கொடுக்கிறது.' என்று தமது கட்டுரையை முடித்துள்ளார். இதை
மறுத்து யாரேனும் சொன்னதுண்டோ? யாரேனும் எழுதிவைத்திருப்பதுண்டோ?
இவருடைய உபக்ரமமென்ன உபஸம்ஹாரமென்ன வென்று கேட்டால் திசை
தொறும் விழிப்பார். நான்முகனும் அல்லது திசைமுகனும் ஸேவை ஸாதிப்பார்."
என்று. இங்ஙனே ஒவ்வொரு லக்கமுமிட்டு நாமெழுதியிருக்கிற ஸமாதானங்கள்
அஸமஞ்ஜஸமென்று தோன்றினால் அதை இவர்கள் நிரூபிக்க வேண்டுமே யொழிய
'ஸமாதானமே எழுதவில்லை' என்பது உலக வஞ்சனை. ஓரக்ஷரமும் விடாமல் கண்
டித்திருக்கிறோம். நமது கண்டகோத்தாரத்தில் (பக்கம் 7-ல்) நாம் எழுதியிருப்
பதை மறுபடியும் எடுத்துக் காட்டுகிறோம். அதாவது "ஸ்வாமி எம்பெருமானார்
ஸ்ரீ பாஷ்யம் தொடங்கும் போது" ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே என்

றருளிச் செய்தார். அதே ரீதியில் இந்த ப்ரஹ்மஸ்ரீயின் ஏகைகமப்யக்ஷரம் ப்ரத்யாக்யாயதே'' என்று ப்ரதிஜ்ஞைசெய்து எழுதத் தொடங்குகிறேன்.'' என்பது. அதைக் கண்ட வராஹர் என்ன செய்யவேண்டுமென்றால்—

'அண்ணா ஸ்வாமி இப்படி ப்ரதிஜ்ஞை செய்திருக்கிறாரே யொழிய ப்ரதிஜ்ஞையின்படிக் கண்டிக்க வில்லை'' என்றெழுதவேண்டும். கண்டிக்கப்படாதனவும், கண்டிக்கப்படவேண்டியனவுமான விஷயங்கள் இன்னின்னவை என்று விளக்கியிருக்க வேண்டும். இனியாவது எழுதுக.

## சதபூஷணீ வஜ்ரகுடாரம்

சிலவாண்டுகட்கு முன்பு அனந்தக்ருஷ்ண சாஸ்த்ரியென்பவர் ஸ்வாமி தேசிகன் ஸாதித்த சததூஷணியைத் தூஷித்து 'சதபூஷணீ' என்றதொரு சுவடியை வெளியிட்டிருந்தார். அதைக் கண்டித்து சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரம் என்று நூலெழுதினோம். அதில் இந்த சாஸ்த்ரி சததூஷணியைக் கையால் தொடுவதற்கும் அநதிகாரி, அதற்கு மறுப்பெழுத ஸுதராம் அநதிகாரி என்பதைப் பரக்க நிரூபித்து அவருடைய அஸமஞ்ஜஸ லேகனங்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டி ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் வெளியிட்டிருந்தோம். அதைக்கண்ட சாஸ்த்ரி "நான் எழுதின வற்றுக்குப் பதிலே யெழுதவில்லை'' என்று பொய்யுரையாக ஒன்றும் எழுதவில்லை. அவர்க்குப் பிறகு போலகம் ராம சாஸ்த்ரி என்பவர் "ராமிடாத்ரேயதர்சனம்'' என்றெழுதி வெளியிட்டார். அதற்கு நாம் "சாங்கர சிரோபூஷா'' என்கிற ஸம்ஸ்க்ருதக்ரந்தத்தினால் ப்ரத்யக்ஷரகண்டனமெழுதி வெளியிட்டோம். அதன் ஸாரத்தைத் தமிழிலெழுதி ஸ்ரீராமாநுஜனிலும் வெளியிட்டிருக்கிறோம். அவரும் கை கூப்பி நின்றே காலங்கழித்தார். தூஷகர்க்கு நாம் எழுதியுள்ள ப்ரத்யக்ஷர கண்டனம் "ப்ரலபோபி ந லிப்யதே'' என்னும்படியானது. தன்னுடைய ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் வரவில்லையென்று எழுதக் கடமைப்பட்ட அந்த தூஷகர் ஏதுக்குக் கரைந்துறைகின்றார்? "நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்.''

தூஷகருடைய பன்னிரண்டு கேள்விகளில் ஒன்றுக்கும் பதில் வரவில்லையென்று புனர்வஸு பத்ராதிபரும் எழுதியிருப்பதாக எழுதுகிறார் வராஹர். அவர் நமது ஸ்ரீராமாநுஜனைக் கண்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை. தத்ப்ரஸ்தாபலேசமும் செய்திருக்கவில்லை. அவர் தீர்ப்புக்கூற அதிகாரியுமல்லர். இது நிற்க.

## முக்கியமான விஷயம், மிக முக்கியமான விஷயம்

(இவர்களின் சூது வெளியிடப்பட்டு விட்டது.) தூஷகருடைய 12 கேள்விகளில் ஒன்றுக்குச் சமாதானம் வெளிவரவில்லை தீர்ப்புக்கூறி விட்டதாக எழுதுகிறார் வராஹர். அவருடைய தீர்ப்புக்கு எவ்வளவு மதிப்பு என்பது தனிப்பட்ட விஷயம். அந்த பத்ராதிபருடைய கட்டுரை புனர்வஸு 188ல் வெளிவந்துள்ளது. இந்த வராஹருடைய அசட்டுரையும் அதிலேயே வெளிவந்துள்ளது. பத்ராதிபர் எழுதியிருப்பது இவர்க்கு எப்போது தெரிந்தது? 188 வெளிவந்தபிறகு அதைக் கண்டன்றோ இவர் தெரிந்துகொள்ள முடியும்? முன்னடியே அக்கட்டுரை இவ்வசட்டுரைக்காரர்க்கு எங்ஙனம் தெரிந்தது? இதற்கு இப்பன்றியார் நின்று பதில்கூறியாக வேண்டும். (ரங்கன் ஜீயரென்று சிலர் வழங்கிவந்த) ஸ்ரீமத் இளங்காடு ஜீயர் ஸ்வாமி ஸாதித்திருக்கக்கேட்ட கதையொன்று கேளீர்.

இளங்காட்டில் ஒரு வீட்டின் இறப்பில் பூசனிக்காய்கள் நிரம்பக் காய்த்திருந்தன; ஒருநாளிரவில் அவற்றைக் களவு செய்ய நினைத்த பக்கத்துவீட்டுக்காரர் இறப்பின்மேலேறிக் காய்களைக் கத்தரித்துக் கொண்டிருந்தார். அக்காய்களில் ஒரு காய் முற்றத்தில் உருண்டு விழுந்தது. அந்த முற்றத்தில் படுத்திருந்தவர் உடனே இறப்பின்மீது பார்த்து 'திருடன்! திருடன்!'' என்று கதறிக் கொண்டே கதவைத் திறந்து வாசலில் சென்றார். மேலே சொலவ திருடர் உடனே இறங்கித் தன் வீட்டில் புகுந்து பக்கத்துவீட்டு வாசலில் குழுமியிருந்தவர்களோடு தாமும் சேர்ந்து கொண்டார். இந்தக் காய் முற்றத்தில் எப்படி விழுந்ததென்று பலரும் கூடிப் பேசுகையில், இந்த உண்மையான திருடர் சொன்னார். ''திருடன் இறப்பின் மேலேறிக் காயைப் பறித்திருப்பன். அது உருண்டு கீழே விழுந்திருக்கும். உடனே நான் குதித்து ஓடிவிட்டேன்'' என்றார். ''திருடன் குதித்து ஓடியிருப்பன்'' என்று சொல்லவேண்டியதற்குப் பதிலாக ''நான் குதித்து ஓடிவிட்டேன்'' என்று தெய்வமே அவருடைய வாக்கில் வெளியிடச் செய்தது. அதே கதைதானிங்கு. இங்கு உண்மையென்னவென்றால் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையாலும் ஸ்ரீராமாநுஜனாலும் கனக்கத்தகர்ப்புண்டு திக்குமுக்கலாடிப்போன தூஷகர் த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய (எங்கும் புகல் பெறுமல்) த்ரீந் புருஷாந் சரணம் கத:. அம்மூவரும் ஒன்றுகூடி இந்த 188-ல் நடிக்கப்புகுந்தனர். அம்மூவர் கட்டுரைகளும் ஓரே நபருடையவையே. இல்லையாகில் பத்ராதிபர் எழுதியது உமக்கு எப்படித் தெரியும் என்று வராஹரைக்கேட்டால் இவரும் தூஷகரைப்போலே திசைமுகராய் நிற்கவேண்டுமத்தனை. இங்கே மற்றொன்றும் கேளீர். இவருடைய கட்டுரையின் தலைப்பு ''திருப்பாவை உரை விமர்சனம்'' இவர் யாரை ரக்ஷிக்க வந்தாரோ அவர் திருப்பாவை உரை விமர்சனம் எழுதியிருக்கிறாரேயல்லது உரை விமர்சனம் எழுதவில்லை. இவரோ உரை விமர்சனமென்கிறார். அதற்குமிதற்கும் ஸம்பந்தகந்தமுமில்லை. இதனாலும் இவர் அஸம்பத்த ப்ரலாபி என்பது தேறிற்று. இனிமேலே போவோம்.

### (காலஞ்சென்ற) D. T. தாதாசார்யர் ப்ரஸ்தாபம்

வராஹர் D. T. தாதாசார்யரை ப்ரஸ்தாவித்து அஸங்கதமாகப் பலவும் எழுதுகிறார். இதற்குச் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம். அவர் பண்டிதராகவும், பண்டித ராஜராகவும், பண்டித ராஜாதி ராஜராகவும் இருக்கட்டும். விஷயத்தை விமர்சிப்போம். அவர் மறைந்தாலும் அவருடைய சுவடிகள் மறையவில்லை. அவர்க்கும் நமக்கும் நடந்த ப்ரபல விவாதங்கள் பல புஸ்தகங்களினால் வெளிவந்திருக்கின்றன. கடைசியாக நிகழ்ந்து கொண்டிருந்த விவாதம் சேரும். தேசிகன் திருவாய்மொழியின் ஆறாயிரப்படியைக் கண்ணெடுத்தும் பாராமல் பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானத்தைக் கொண்டே தம்முடைய ரத்நாவளீஸாரங்களை எழுதினாரென்பது நம்முடைய வாதம். அதை மறுப்பது அவருடைய வாதம். எந்தெந்த விடங்களில் ஆறாயிரப்படியை அவர் தழுவவில்லை என்று நாம் தெரிவித்தோமோ அந்தந்த விடங்களில் ஆறாயிரப்படி பங்க்திகளை அவர் தானே எடுத்துக் காட்டத் தொடங்கி எந்த ஆறாயிரப்படிப் பதிப்பிலுமில்லாததாய் நவீனமான ஒரு பதிப்பில் ஏறிடப்பட்டதான சில வாக்கியங்களை உதாஹரித்துக் காட்டினார். அந்த வாக்கியங்கள் ப்ரக்ஷிப்தங்கள் என்பதையும் அஸங்கதங்கள் என்பதையும் நாம் விவரித்துக் காட்டி (இது வெகு நாட்களுக்கு முன்பல்ல. சென்ற கார்த்திகை-மார்கழியில். அவர் பரமபதிப்பதற்கு இரண்டு மாதங்கட்கு முன்பு) ''இந்த ப்ரக்ஷிப்த பங்க்திகள் ப்ராமாணிகங்களென்று நால்வரெதிரே நீர் நிரூபித்துவிட்டால் அன்றே நான் உமக்கு சரணாகதனாகிறேன்'' என்று வெளியிட்டிருந்தேன். பிறகு இரண்டு மாதம் ஜீவித்திருந்தார். வாய் திறக்க வழியேது? மறந்து பிழைத்தல், முடிந்து பிழைத்தல் என்றிரண்டுண்டு. முடிந்து பிழைத்தார் பாவம்! அவர்க்குப் ப்ரதிநிதியாக இந்த வராஹர் கிளம்பியதானால் தாராளமாகக் கிளம்பட்டும். ''அடியைப் பிடிடா பாரத பட்டா!'' என்கிற கதையாகுக.

### தூஷகருடைய ப்ரசம்ஸை

ப்ரக்ருதம் தூஷகராக விளங்குமவருடைய ப்ரசஸ்திகளை இவர் பரக்கச் செய்கிறார். ராவணகும்பகர்ணாதிகளுக்கு எவ்வளவோ ப்ரசஸ்திகள் உண்டு.

லங்கைச்வர்யத்தைக்கண்ட திருவடி "அஹோ வீர்யம் அஹோ சௌர்யம் அஹோ தைர்யம்." என்று பலவும் சொல்லி வியந்து "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர: ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா" என்று ஆச்சர்யமாகக் கூறினார். ஸ்ரீவைஷ்ணவ வுலக மெல்லாம் இந்தத் தூஷகர் விஷயத்தில் அப்படித்தான் கூறுகிறது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய வித்வேஷமே வடிவெடுத்த வ்யக்தியென்று இயம்பாதாரில்லை. ("அக்நிஹோத்ராச்ச வேதாச்ச ராக்ஷஸாநாம் க்ருஹே க்ருஹே" என்றொரு வசநம் பலரும் சொல்லி வருகிறார்கள். அதற்கு ஆகரம் தெரியவில்லை. இவ்வராஹர்க்குத் தெரிந்திருக்கும்.)

## மதுராந்தகம் ஸ்வாமியைச் சண்டைக்கிழுத்தல்

வராஹர் எழுதுகிறார்—பரமஸாத்விகரும் ப்ரபல வித்வானுமான மதுராந்தகம் ஸ்வாமியை வலுவில் சிலர் சண்டைக்கிழுத்து விட்டதாக. ஸ்ரீ ஸுதர்சன பத்ராதிபர் இப்பேச்சை இலேசாக விட்டுவிடமாட்டார். அந்த ஸ்வாமியின் விடை விரைவில் வெளிவர உலகம் காணும். மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு மஹோத்ஸவம் நடந்த காலத்தில் பலபல வித்வான்கள் எழுதின கட்டுரைகளைக் கொண்ட மலர்கள் பல விடங்களிலிருந்தும் வெளிவந்தன. அப்படி எழுதின வித்வான்களில் ஸ்ரீ. உ. வே. வாகம்ருதவர்ஷி வரதாசார்ய ஸ்வாமியும் ஒருவராகிச் சிறந்த வியாஸமொன்றெழுதி ஸுதர்சன பத்ரிகையில் வெளியிடுவித்தார். "தத்ரைவ கேசிதபலா: சலபீ பவந்தி" என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்தியின்படி சலபமாக விழுந்து மடிகிறவர் யாரென்பதை உலகமறிந்திருக்கிறது.

புநர்வஸு பத்ரிகையில் "ஆழ்வார்கள் கண்ட ராமன்" என்கிற பொருளற்ற கட்டுரையை நீண்ட காலமாக எழுதிவருகிற வ்யக்தி "தென்னாசார்யர்கள் கலிபுருஷனுடைய அபராவதாரம்" என்றொரு கட்டுரை யெழுதி ஸ்ரீரங்கநாத பாதுகையில் வெளியிடுவித்தபோது இவர் என்ன செய்தாரென்பதை இவரையே கேட்டறிக. அந்த கலிபுருஷாவதார வ்யாஸம் பாதுகா பத்ரிகையில் வெளிவந்ததை அறிந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதாண்டவன் மிகமிக அநுதபித்து இனிமேல் வைஷம்ய வர்த்தகமான வ்யாஸம் ஒன்றுகூட பாதுகையில் வெளிவராதென்று கட்டளையிட்டு அதை இற்றைக்கும் பரிபாலித்து வருவதாகக் கேள்விப்படுகிறோம். அந்த ரீதியை புநர்வஸு பத்ராதிபரும் மேற்கொண்டு உய்வது நன்று.

## நிகமனம்

பாம்பு தேள்களை தேடிக்கொண்டு சென்று வதைப்பார் ஆருமில்லை. அதேபோல மடிவது யாருடைய குற்றம்? நமது நூல்களுள் ஒன்றில் எழுதியிருப்பதொன்றை இங்கு நினைவூட்டி நிற்போம். "ராமாவதார க்ருஷ்ணாவதாரங்களில் தீங்குசெய்ய வருமவையெல்லாம் அநுக்ஷணம் மடிந்துகொண்டே யிருப்பதைக் கட்கூடாகக் கண்டு வைத்தும் மேன்மேலும் வந்து வந்து விழுந்து மடிகின்றனவென்பதைக் கதை காண்கிறோம். இது வாஸ்தவமாக இருக்குமா என்று நாம் சங்கித்ததுண்டு. அந்த சங்கை இவர்களால் நீங்கிற்று" என்றெழுதியிருப்பதுதான் அது. காஞ்சிபுரத்தில் வாகனங்களெல்லாம் வைத்திருக்கிற ஒரு மண்டபத்தைப் பார்க்கவந்தனர் சிலர். யாளி வாகனத்தின் வாயைப் பார்த்து அது திறந்திருப்பதனால் அதனுள்ளே கை விட்டான் ஒருவன். அதனுள் இருந்த செந்தேள் ஒன்று சாகக்கடித்தது அவனை. இந்த கஷ்டத்தைத் தன்னோடுகூட வந்தவர்களும் அநுபவிக்க வேண்டுமென்றுகருதிய அவன், "ஹாஹா! அம்ருத கலசமன்றோ உள்ளே இருக்கிறது!" என்று சொல்ல மற்றொருவனும் அதனுள்ளே கையிட்டு, அவனும் இந்த துக்கத்தைப்பெற்று மற்றவர்களுக்கும் இது கிடைக்க வேணுமென்கிற விசால நோக்கத்தினால் அவனும் இப்படியே சொல்ல. இப்படியே அங்கு வந்த பத்துப்பேரும் சொல்லிக்கொண்டு வாகனத்துள் கைவிட்டு செந்தேள் கடிக்கப்பெற்று வாகனமண்டபத்தில் விழுந்து விழுந்து புரண்டு கதறுகின்றனர். அந்தக் கதையாகத்தானுள்ளது இவர்களது கதையும். இத்தகைய ஆனந்தாநுபவம் செய்யவந்தார் இப்போதிந்த வேள்விப் பன்றியார்.

புநர்வஸு பர்யவேக்ஷணம் முற்றிற்று.

அட்டையின் 2ம் பக்கத் தொடர்ச்சி

பற்றிப் புதிதாக ஒன்றும் எழுதத் தேவையில்லை. இவர் தற்சமயம் திருவாய்மொழியையும் ஆங்கிலத்தில் எழுதிவருவது மிகவும் போற்றத்தக்கதும், அது எப்பொழுது நமக்குக் கிடைக்குமென்று பக்தர்களால் எதிர்பார்க்கக் கூடியதுமாகும். மேலே விவரித்த ஸ்ரீவசனபூஷணம் வேண்டியவர்கள் ரூ. 5/- கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

Sri S. SATHYAMURTHY AYYANGAR,
9, Prem Nagar, GWALIOR (M. P.)
Pin 474003.

---

## புத்தக வரவேற்பு

பத்ராதிபர்

ஸ்ரீமான் R. செந்தாமரைக்கண்ணன் ஐயங்கார் எழுதிய "தென்கலை வடகலை ஸமரஸம்" என்கிற நூல் வரப்பெற்றோம். பெரும்பாலும் நமது நூல்களில் கண்ட விஷயங்களே இதில் இடம் பெற்றுள்ளன. லௌகிக வ்ருத்தியில் வாழ்ந்தாலும் மிகவும் நுணுக்கமான ஸம்ப்ரதாயக் கருத்துக்களை நன்குணர்ந்தவர் இவர் என்பது இந்நூலை வாசிப்பவர்களுக்கு நன்கு புலனாகும்.

கிடைக்குமிடம்: R. SENTHAMARAIKKANNAN, Accountant,
Office of the Deputy Chief Accountant,
Tamil Nadu Electricity System,
Perundurai Revenue Unit,
PERUNDURAI. Coimbatore (Dt.)

---

## அரங்கேசற்கீடளித்த மஹோத்ஸவ நிகழ்ச்சிகள்

நிறைஞானத்தொருவனுகிய நெடுமால் ஆழ்வார்களுக்குப் பிரமகுருவானவன். அம்முகில்வண்ணன் (திருவரங்கன்) பரமாசார்யரான மாமுனிகளுடைய ஈட்டுப்பெருக்கினை முற்றப்பருகி, சிஷ்யத்வம் நிறம்பெற "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்று தொடங்கும் தனியனை, நமக்கு நித்யாநுஸந்தானமாகும்படி அருளினன் என்பது யாவருமறிந்ததே. அத்தனியன் அவதரித்த நன்னாள் பிரமாதீச ஆண்டின் ஆனித்திருமூலம். நிகழுமாண்டின் ஆனித் திருமூலம் (13, 14—7—73) ஒன்பதாவது வைரவிழாவாகத் தேறிநின்றது. இந்த மஹோத்ஸவம் திருவரங்கம் பெரியகோயில், திருக்கண்ணபுரம், திருவயிந்திரபுரம், திருவல்லிக்கேணி, திருக்கோவலூர், மதுரை (கூடலழகர் ஸந்நிதியிலும், நவநீதக் கண்ணன் ஸந்நிதியிலும்) புதுவை ஆகிய திவ்யதேசங்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவ்விடங்களின் நிகழ்ச்சிகளை ஆங்காங்குள்ள பெரியார்கள் விரிவான கட்டுரைகள்மூலம் நமக்குத் தெரிவித்திருக்கிறார்கள். ஒவ்வொரு கட்டுரையையும் வெளியிட அவகாசமில்லாமையினால் நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகத் தெரிவிக்கிறோமிங்கு. மேலே குறித்த திவ்யதேசங்களெல்லாவற்றிலும் ஐந்து நாட்கள் அநேக ஸ்வாமிகளைக் கொண்டு ஈடுமுப்பத்தாறாயிரப்படி பாராயணமும் வித்வான்களைக் கொண்டு விசேஷ உபந்யாஸங்களும் திருவீதி மஹோத்ஸவங்களும் திருவாய்மொழி ஸேவை சாற்றுமுறை கோஷ்டிகளும் நடத்திவைக்கப்பட்டன. (பத்ராதிப ப்ரதிநிதி.)

ரிஜிஸ்டர் நெ. 2975 ஸ்ரீ ராமாநுஜன்:

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்.
2. பூர்வாசார்ய தமிழ்ப்ரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்.
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸ ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான லிஸ்டுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M.O. செய்பவர்கள்

To

Sri T. A. ANANTHALWAN,
Manager, Granthamala Office, Kancheepuram-3
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

---

livered please return to

P. B. ANNANGARACHARYA
Kancheepuram-3.

---

To

Sriman / Srimathi



426 Sri Vengeepuram
Raghavacharyaswami,
Melkote, (Mysore State)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-3.